# அகல்யை (நாடகங்கள்)

## முன்னுரை

**த**மிழுக்கு சிறுகதைகள் புது போல ஓரங்க நாடகங்களும் புதுசு. சிறுகதை வளம் பெருக்கிய மணிக்கொடி கோஷ்டி சிறுகதைகக் காரர்களில் கு.ப.ராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி, ந.சிதம்பர சுப்ரமண்யன் மூவரும் இந்த உருவத்தை கையாண்டவர்கள்.

**கு**.ப.ரா.வின் படைப்பு உள்ளத்தை பண்படுத்தியது சமஸ்கிருதப் படிப்பு வால்மீகியும் காளிதாஸனும் பவபூதியும் அவரது மனதை மலரச் செய்வதவர்கள் என்று நபிச்சமூர்த்தி கூறி இருக்கிறார். அதே போல நார்வே நாடக ஆசிரியர் ஹெக்ரிக் இப்ஸன், வங்கக்கவி தாகூர் இருவரிடமும் ஈடுபாடு கொண்டிருந்தவர்.

**எ**னவே சிறுகதை, கவிதை போல நாடகத்திலும் முயற்சிகள் செய்ய அவருக்கு மனப்பக்குவம் இருந்தது 1930க்குள், மேல்நாட்டு ஓரங்க நாடங்கள் பிரபலமாக தெரிய வந்த காலம். வெகு திறமையாக கையாளப்பட்ட சிறந்த ஓரங்க நாடகங்களைப்படிக்கும் வாய்ப்பு பெற்ற கு.ப.ரா.அந்த உருவத்தால் வசீகரிக்கப்பட்டு, கையாண்டவர்.

**பு**ராணக் கதையம்சங்களை தன் நாடகக் கருக்களாக எடுத்துக்கொண்டதிலே மேனகையும்-சகுந்தலையும், அகலியை, சத்யவ்ரதனும்-சத்யவதியும் உருப்பெற்றன. சரித்திரம், பிரதாப்சிங்கை கொடுத்தது. தற்கால சமுதாய வாழ்வுநிலை கிஸ்திபாக்கி ஏலம், சில்லரைச் செலவுகள், போன்றவைகளை தந்தது.

**இ**தெல்லாம் விட முக்கியமாக, கு.ப.ரா.விஷயம் என்று முத்திரையிட்டுச் சொல்லக்கூடிய ஒரு தன்மை உண்டு. ந.பிச்சமூர்த்தி சொல்லி இருப்பது போல-

'**நி**ழலைப்போல் பெண்ணின் சித்தத்தை இருளாக்கும் உணர்ச்சிகளையும், கருவாக நின்ற வேட்கைகளையும் வெகு நுட்பமாகவும்; பெண்ணின் மனதை சித்தரிப்பதில் வல்லவன்.'

**எ**ன்பதுதான் அவருடைய தனித்தன்மை, தனித்திறமை, தனி சாதனை. தமிழ் படைப்பாளிகளில் அவரை நெருங்குகிறவர்கள் ஒருவரும் இல்லை இந்த அம்சத்தில் என்று சவாலாக சொல்ல முடியும்.

**நா**வலுக்கும் சிறுகதைக்கும் போலவே நாடகத்துக்கும் ஓரங்க நாடகத்துக்கும், பெரும் வித்யாசம் உண்டு, கதையம்சத்திலே, கட்டுக்கோப்பில், ஓரங்க நாடகத்துக்கான உத்தியைசரிவரக் கையாண்டு பாத்திரங்களின் சம்பாஷணைகளை அழுத்தமாக, சிக்கனமாக உணர்ச்சி தீவிரம் மிகுந்ததாக, பொருத்தமான விவகாரம் பேசுவதாக அமைத்து க்ளைமாக்ஸ் என்கிறோமே உச்சநிலையை இயல்பாக ஏற்றித் தந்து கு.ப.ரா. படைத்திருக்கும் இந்த நாடகங்கள் ரொம்ப முன்னதாகவே தமிழ் வாசகர்கள் கைக்கு வந்திருக்க வேண்டும் வந்திருந்தால் நாடகத்துறையே செழிப்புற்று இருக்கும். நல்ல வழிகாட்டியாக இருந்திருக்கும், நாடகம் எழுத முன் வருபவர்களுக்கு, போனது போகிறது. தாமதம் ஆனதினாலும் பரவாயில்லை இனியாவது பயன்படுத்திக்கொள்ளப்படவேண்டும்.

**இ**ந்த நாடகங்கள் சுதந்திரச்சங்கு, மணிக்கொடி, பாரததேவி ஆகிய முப்பத்துக்கள் காலத்து பத்திரிகைகளில் வெளியானவை.

**சி.சு.செல்லப்பா.**

## அகலியை

### முதல் அங்கம்

**(கங்கைக்** கரையில் கௌதமரின் ஆசிரமம், ஓர் அடர்ந்த வனபூமியில் தெற்கு நோக்கி அமைந்திருக்கிறது நடுவே முற்றம். நாலு பக்கத்திலும் கூரை போட்ட அங்கணங்கள். முற்பகல். வாசற் பக்கத்துத் தாழ் வாரத்தில் கௌதமர் தர்ப்பாசனத்தில் அமர்ந்திருக்கிறார். பக்கத்தில் கமண்டலமும், இரண்டு மான் தோல் விரித்த ஆசனங்களும் அடுத்தாற் போல ஹோமசாலை, அதைத் துலக்கிக்கொண்டிருந்த அகலியை வெளியே வருகிறாள்)

கெதமர்: அகலியே! ஹோமசாலை தயாராகி விட்டதா? நான் போகலாமா?

அகலியை: எல்லாம் சித்தமாக இருக்கிறது போகலாம். ஆனால்.... (வாசல் பக்கம் பார்த்து) நாரத பகவான் வருகிறார் போலிருக்கிறதே! ஆமாம், அதோ வருகிறார்!

( வீணையுடன் நாரதர் வருகிறார். நாத தனும் என்ற பல்லவியை வாசிக்கிறார்)

கௌதமர்: (எழுந்து) மஹரிஷியே! வரவேண்டும். அகலியே, அர்க்கிய பாத்தியங்கள் கொடு.

(அகலியை போகிறாள்)

நாரதர்: கௌதமா, சௌக்கியமா?

கௌதமர்: உங்களுடைய அனுக்கிரகத்தால் சௌக்கியந்தான்.

(அகலியை அர்க்கிய பாத்தியங்களுடன் வருகிறாள். கௌதமர் அவற்றை வழங்குகிறார். எல்லோரும் உசிதமான ஆசனங்களில் அமருகிறார்கள்)

நாரதர்: (வீணையைக் கீழே வைத்துக்கொண்டு) கௌதமா? உங்கள் இருவருக்கும் எப்பொழுதும் மங்களம் உண்டாகட்டும். இல்லற தர்மம் சரியாக நடந்து வருகிறதா?

கௌதமர்: திருப்தியாகவே நடந்து வருகிறது. உங்கள் புத்திரியும் மிகவும் இங்கிதம் அறிந்தவள்.

நாரதர்: போகிறது! உம்மை இல்லறத்தில் ஈடுபடும்படி வற்புறுத்திய எனக்குக் கெட்ட பெயர் இல்லையே?

கௌதமர்: இல்லை, இல்லை, இல்லறத்தினால் என்னுடைய ஒழுக்கத்திற்கு ஒருவிதமான பாதகமும் இல்லை, சௌகரியமாகவே இருக்கிறது.

நாரதர்: குழந்தாய்! இந்த நியமம் உனக்கு இஷ்டமாக இருக்கிறதா?

அகலியை: (புன்னைகயுடன்) இருக்கிறது.

நாரதர்: அதுதான் எனது கோரிக்கை. இல்லறத்தில் நடைபெறும் தர்மம் வெறெதிலும் இல்லை. சதிபதிகள் இதமாக வாழ்ந்து சத்தியத்திலும், தர்மத்திலும் ஈடுபட்டால் அவ்வாழ்க்கையைவிட மேலானது இல்லை. கௌதமா, உமது தவ வலிமைக்கு ஏற்ற பத்தினி உமக்கு அமைய வேண்டும் என்று சிரமப்பட்டு இந்த ஏற்பாட்டைச் செய்தேன்.

கெதமர்: ஆனால் இல்லறத்தைக்காட்டிலும் சர்வ சங்க பரித்தியாகம் மேலல்லவா?

நாரதர்: அது சரீரத்தில் நடக்கக் கூடிய காரியமன்று; அதற்கும் செயலுக்கும் விரோதம். வாக்கியார்த்தத்தில் சௌகரியமாக வழங்கப்படும் வார்த்தையே ஒழிய அது வேறொன்றுமில்லை.

கௌதமர்: ஜீவன் முக்தாவஸ்தை பின் எப்பொழுது?

நாரதர்: அது ஒரு லட்சியமே தவிர எப்பொழுதும் சாத்தியமாகாது.

கௌதமர்: சமாதி?

நாரதர்: சமாதி மூர்ச்சையைப் போன்ற ஓர் அவஸ்தைதான். அது நிரந்தரமல்ல!

கௌதமர்: பின் அது எது?

நாரதர்: ஓர் உதாரணம் மட்டும் சொல்லலாம். தாமரை இலையில் தண்ணீர் போல.

கௌதமர்: அப்படி இருப்பது சாத்தியந்தான் என்று எனக்குத் தோன்றுகிறது.

நாரதர்: எப்படி?

கௌதமர்: நானும் அகலியையும் அதை நிரூபித்துக்காட்டுகிறோம். அதற்காகவே நான் பந்தங்களைக் குறைத்திருக்கிறேன். சிஷ்யர்களை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆசிரம குடும்பத்தைக் குறைத்திருக்கிறேன்.

நாரதர்: அப்படியல்ல, அப்படியல்ல! வித்தியா தானம் செய்ய வேண்டியது மிகவும் அவசியம். ஒருவன் கற்ற கல்விகூட அப்பொழுதுதான் விளக்கம் பெறுகிறது. உம் ஏற்பாடு அகலியைக்குப் பிடித்திருக்கிறதா?

அகலியை: (பணிவுடன்) அவருடைய இஷ்டமே என் இஷ்டம்.

நாரதர்: (மாறி மாறி இருவரையும் பார்த்த வண்ணம்) அப்படியல்ல. கேவலம் கீழ்ப்படிதலால் மட்டும் சதிபதிகளுக்குள் ஒற்றுமை ஏற்பட்டுவிடாது. இருவருடைய மனப்பான்மையும் தனியாக வளர்ந்து ஆராய்ச்சியினால் ஒன்று படவேண்டும். அப்பொழுதுதான் பரஸ்பர மரியாதை, ஹிதம்-இவைகள் ஏற்படும். பெண்களுக்கு சுயபிரக்ஞை அவசியம் வேண்டும். பார்க்கப் போனால் படிப்பு என்பதே, வித்யை என்பதே, பெண் அம்சம்-சரஸ்வதி.

கௌதமர்: (சிரித்துக்கொண்டு) பெண்மைக்குச் சகல சிறப்பையும் ஏற்றிவிட்டீர்கள்!

நாரதர்: அதுதானே உண்மை-பிரத்தியட்சம்! என் வீணையை பெண் தத்துவமாக வைத்துக்கொள்ளும். அதிலிருந்து நாதத்தைக் கிளப்பும் எனது ஊக்கம் புருஷதத்துவம். அப்படிப்பட்ட உயிரிசை வெளியாவதற்கு இந்த ஆழ்ந்த ஒற்றுமை அவசியமல்லவா?

கௌதமர்: என் தபசின் நோக்கத்தை அகலியையும் உகந்து வளர்த்தால்தான் பலிக்கும் என்கிறீர்களா?

நாரதர்: என்ன மெதுவாய்க் கேட்கிறீரே, அதில் என்ன சந்தேகம்?

கௌதமர்: அப்படி மனோபாவம் ஒத்துக்கொள்வது எப்பொழுதும் முடியுமா?

நாரதர்: உம்முடைய நோக்கத்தின் வலிமையில் இருக்கிறது! அது சரியான வேகமுடையதாக இருந்தால் நீர் சொல்லும் மனோபாவ ஒற்றுமை தானாக ஏற்படுகிறது. என்ன அகலியை, உனக்கு என்ன தோன்றுகிறது?

அகலியை: நான் என்ன தனியான அபிப்பிராயம் கொள்ளக் கூடும்?

(கௌதமரின் முகத்தைப் பார்த்துவிட்டு தலை குனிந்து கொள்கிறாள்...)

நாரதர்: ஒற்றுமை என்பது கௌதமா, புகட்டுவதாலும் வற்புறுத்தவதாலுமா ஏற்படும்? உமது லட்சியத்திலும் மனத்தைக் கவரும் அம்சம் இருந்தால்தானே உயிருள்ளதைப் போல வளரும்? வளர்ச்சிக்கு உம்முடைய மனைவியும் உதவக்கூடும்?

கௌதமர்: தவத்திற்கும் பெண்ணுக்கும் விருத்தமல்லவா?

நாரதர்: கௌதமா, என்ன பேதைமை! சமித்துக்கும் அக்கினிக்கும் விருத்தம் என்பதுபோல இருக்கிறது. உமது மனது பக்குவமடையவில்லையே, எனக்குப் பயமாக அல்லவோ இருக்கிறது?

கௌதமர்: எதற்காக?

நாரதர்: உமது தர்மத்திற்குப் பங்கம் வருமென்றும்-

கௌதமர்: என்னாலா?

நாரதர்: ஆம்.

கௌதமர்: நான் ஒரு நாளும் ஒழுக்கம் தவறமாட்டேன்.

நாரதர்: சதா ஒழுக்கத்திலேயே கண்ணுடையவன் தர்மத்திலிருந்து நழுவிவிடக்கூடும்

கௌதமர்: எப்படி?

நாரதர்: வெயிலிலே இருக்கிறவனுக்கு நிழலில் வந்ததும் கண்ணுக்கு எதிரில் இருப்பது கூடப் புலப்படாது.

கௌதமர்: அது போல?

நாரதர்: உமது தீவிரத் தவத்தில் உமது இல்லற தர்மத்தை மறந்து விடுவீர். அந்த மாதிரி பிசகு எவ்விதமான, கண்மூடித்தனமான ஊக்கத்திலும் ஏற்படுவது சகஜம்.

கௌதமர்: (கர்வத்துடன்) உங்களுடைய கிருபை இருந்தால் என்றும் தவறமாட்டேன்.

(ஹோம சாலையைப் பார்க்கிறார்)

நாரதர்: (வீணையைக் கையில் எடுத்துக்கொண்டு) நான் போய் வருகிறேன். கௌதமா! உமது நியமம் தாமதப்படுகிறது. போலிருக்கிறது. இல்லறத்தில் ஒன்று மட்டும் மிகவும்மக்கியம். இதை ஜாக்கிரதையாகக் காத்து வாருங்கள்; பரஸ்பர மரியாதை மிகவும் அவசியம். அது வளருமாறு நடந்துகொள்ளுங்கள். அகலியே வரட்டுமா?

(எல்லோரும் எழுந்து நிற்கிறார்கள்)

அகலியை: (சற்று முன்வந்து) ஆஹா.

(நாரதர் போகிறார்)

**இரண்டாம் அங்கம்**

**கௌ**தமரின் ஆசிரமத்து முன் வனபூமி. பிற்பகல் அகலியையும் சாந்தையும் ஒரு மரத்தடி மேடையில் உட்கார்ந்திருக்கிறார்கள்.)

சாந்தை: சதா உனக்கு என்னடி காரியம் இருக்கும்? எங்கள் ஆசிரமத்துப் பக்கம் எட்டிக்கூடப் பார்க்கமாட்டேன் என்கிறாயே?

அகலியை: (ஜாடை காட்டி)மெள்ளப் பேசு. உள்ளே சிரமப்பரிகாரம் செய்து கொண்டிருக்கிறார். உன் காரியம் சுருக்க ஆகிவிடுகிறது.

சாந்தை: (கர்வத்துடன்) சிஷ்யர்கள் இருக்கிறார்களம்மா! முக்கால்வாசி செய்துவிடுகிறார்கள். உங்காத்துக்காரர் ஏனடி சிஷ்யர்கள் வைத்துக்கொள்ளவில்லை?

அகலியை: அதென்னமோம்மா, அதெல்லாம் நான் கேட்கிறதில்லை. எல்லாம் நான் செய்தால்தான் நல்லதாம். நானே செய்தால்தான் எனக்கும் திருப்தியாக இருக்கிறது.

சாந்தை: நன்றாயிருக்கு! அசடுதான். அதென்னடி, கொஞ்சமாவது அப்பாடா என்று படுத்துக்கொள்ள வேண்டாமா? சதா வேலை என்றால் அப்புறம் அக்கம் பக்கம் சிநேகம் வேண்டாமா? அதென்ன ஆற்றுக்குப் போகிறபோது என்னைக் கூப்பிடாமல் போய்விடுகிறாய்?

அகலியை: நான் ரொம்ப முன்னால் போய் விடுகிறேன். அப்பொழுது நீங்கள் ஒருவரும் எழுந்திருக்கிறது கூட இல்லை.

சாந்தை: உனக்கென்னடி, குழந்தையா குட்டியா! ராத்திரி நன்றாய்த் தூங்கலாம். எங்களாசிரமத்தில் அப்பா! ராத்திரித் தூக்கமே கிடையாது.

அகலியை: குழந்தைகள் பெருமை உனக்கு, அப்படிச் சொல்லிக்கொள்ளுகிறாய்.

சாந்தை, ஐயோ, போதும்! நான் அதுகளைக் கட்டிக்கொண்டு படுகிறபாடு!

அகலியை: சிஷ்யர்கள் எல்லாம் செய்து விடுவார்கள் என்றாயே!

சாந்தை: பாவம்! உனக்கென்ன தெரியும் அந்தக் கஷ்டம்! குழந்தை

அகலியை: நீங்கள் எவ்வளவு பசு மாடுகள் வைத்திருக்கிறீர்கள்?

சாந்தை: நாலு! ஹோமத்திற்கு வேண்டியிருக்கிறதோ, இல்லையோ, சொல்லு!

அகலியை: நாங்கள் ஒரு மாடுதான் வைத்துக்கொண்டிருக்கிறோம். அதற்கு சுசுரூஷை செய்வதிலேயே எப்பொழுது போய்விடுகிறது.

சாந்தை: நான் அதுகள் கிட்டக்கூடப் போகிறதில்லை. குளிப்பாட்டுகிறதோ, மேய்கிறதோ, கறக்கிறதோ சகலமும் அவர்கள்தான்.

அகலியை: அவர்கள் பாடம் கற்றுக்கொள்வது எப்பொழுது?

சாந்தை: உனக்கு அந்த வியவகாரமே தெரியாது போலிருக்கிறது! ஆனாலும் உன் அகத்துக்காரர் என்னை இப்படி வைத்திருக்கக்கூடாது. பாவம்! அவர்தான் என்ன செய்வார்? சிறு வயசு, அனுபோகம் போதாது, தபஸ் இன்னும்.

அகலியை: (சிறிது கோபத்துடன்) சிறு வயதாய் இருந்தால் என்ன? தபஸ் இருக்கக் கூடாதா? நன்றாய்ச் சொன்னாய்! அவருடைய தபஸால்தானே என்னைக் கல்யாணம் செய்துகொண்டார். போட்டியில் தேவேந்திரனே தோற்றுப் போனாரே.

சாந்தை: (ஆச்சரிய பாவனையுடன்) ஆனால் தேவேந்திரனை விட்டுவிட்டா இவருக்கு வந்த வாழ்க்கைப்பட்டிருக்கிறாய்!

அகலியை: என் புருஷரின் தவவலிமை ஜயித்தது!

சாந்தை: உம், ஹோமத்தில் கூப்பிட்டு ஆகுதி கொடுக்கிறார்களே, அந்த இந்திரன்தானே?

அகலியை: ஆமாம்.

சாந்தை: இந்தப் பிராமணனுக்காகத் தேவபோகத்தை இழந்தாயே! அதற்குத் தகுந்த அந்தஸ்தில்தான் உன்னை வைத்திருக்கிறான்!

அகலியை : (கோபத்துடன்) என்னடி சாந்தே, நீ இப்படித் தாறுமாறுமாய்ப் பேசுகிறாய்? ரிஷிபத்தினிக்கு என்னடி அந்தஸ்து வேண்டிருக்கிறது?

சாந்தை: வெளியில் எனக்காகச் சொல்லிக்கொள்ளாதே. இங்கே வந்த நாள் முதல் முகம் வாடித்தான் இருக்கிறது. ஒரு நாளாவது நீ சிரித்து நான் பார்த்ததில்லை. அந்தப் பிராமணன் தான், உன்னை என்ன சமாசாரம் என்று கேட்டு, உன் மனம் போல வைத்துக்கொள்ளக் கூடாதோ?

அகலியை: நீ எண்ணுகிறது பிசகு. எனக்கு ஒரு குறையும் இர்லலை.

சாந்தை: நிஜமாகச் சொல்லடி, எதற்காக சொர்க்க போகத்தைக் காலால் உதைத்தோ மென்று இப்பொழுது தோன்றுகிறதா இல்லையா?

அகலியை: இல்லை

சாந்தை: இனிமலாவது தோன்றும். வேண்டுமானால் பாரேன். உன்னைப் போல இவ்வளவு அழகாக ஒருத்தியும் இதுவரையில் ரிஷிக்கு வாழ்க்கைப்பட்டதில்லை. எப்பொழுது பார்த்தாலும் ஆசிரம வலை செய்து செய்து தேய்வதற்காக என் அழகு ஏற்பட்டது? சதா மூக்கைப் பிடித்துக்கொண்டு வந்தார்? ரம்பையைப் போல் இருக்கிறாய். எனக்கு என்னவோ அம்மா ஆத்திரம் பொங்குகிறது! உனக்குச் சரியா இருக்கிறபோது நான் எதற்கு உளற வேண்டும்? நான் போகிறேனம்மா!

அகலியை: (சமாதானமாக) நான் என்ன சொன்னேன். இப்பொழுது? என் அகத்துக்காரரைப் பற்றி நாம் பேச வேண்டாம். வேறு ஏதாவது பேசேன்?

சாந்தை: நன்றாயிருக்கிறதம்மா, என்னை வம்பி என்று வைத்துவிட்டாயா?

அகலியை:நான் என்ன சொன்னாலும் குற்றமாக எடுத்துக்கொள்ளுகிறாயே?.... என்ன வெய்யில் பார்த்தாயா?

சாந்தை: எங்கள் ஆசிரமத்தில் அவ்வளவு இல்லை. இங்கே என்னவோ இப்படித் தகிக்கிறது. இங்கே இந்தமான்கள் உபத்திரவம் அதிகம் போல் இருக்கிறதே மேலே பார்த்து) இதென்ன, ஒரே இறைச்ல் காதைத் தொளைக்கிறது? இவ்வளவு பஷிகள் ஏதடி இங்கு? அங்கே இவ்வளவு கிடையாதே?

அகலியை: இவைகளைக் கவனித்துக்கொண்டே இருந்தால் என் பொழுது போய்விடுகிறது. இந்தப் பூஞ்செடிகளுக்குத் தினமும் தண்ணீர் விடவேண்டி இருக்கிறது. வெய்யில் காலத்தில் ஒரு வேளை தவறினால் கூட வாடி வதங்கிப் போய்விடுகின்றன. அதைப் பார்க்கச் சகிக்கிறதில்லை எனக்கு. அந்தச் சம்பங்கியில் நேற்றுத்தான் முதற்கொத்துப் பூத்தது. அதைத்தொட்டுப் பார்ப்பதுதான் எனக்கு வேலை.

சாந்தை: அதை என்ன பண்ணுகிறது?

அகலியை: அதென்ன அப்படிக் கேட்கிறாய்? அதைப் பார்த்துக்கொண்டே இருந்தால் போதாதா? நுனியில் மருதாணி இட்ட நகம் போல் இருக்கிறது பார்!

சாந்தை: (குத்தலாக) ஆமாம், பாவம்! வேறு எதில்தான் நீ திருப்தி அடைகிறது? ஏதாவது வேண்டுமே?

அகலியை: பொழுது போக்கு மட்டுமல்ல, இவற்றிற்கு நடுவே இருந்தால் எனக்கு ஒரு சந்தோஷ் ஏற்படுகிறது.. இவை காற்றில் அசைகிறபோது பார்த்தால் ஏதோ அபிநயம் பிடிப்பதுபோல் இருக்கும்.

சாந்தை: அதே ஞாபகந்தான் உனக்கு. நீயும் தேவலோகத்தில் இருந்தால் அப்ஸரலீகளின் நடுவிலே அபிநயம் பிடிக்கலாம்; என்ன செய்கிறது?

அகலியை: அப்படிப்பட்ட எண்ணங்கள் என் மனத்தில் இல்லவே இல்லை. இல்வாழ்வே எனக்குப் போதுமான நிறைவாக இருக்கிறது. ஆயிற்று, எழுந்து விடுவார். அர்க்கியமும் பாத்தியமும் எடுத்து வைக்க வேண்டும்.

சாந்தை: சரி, நான் போகிறேன். கொஞ்சம் தூங்க வேண்டும். ரொம்ப சிரமமாக இருக்கிறது.

அகலியை: (போகிறாள்) என்ன கர்வம் இவளுக்கு! இவள் பேச்சு என் மனத்தைக் கலக்குகிறது? சீ, இனிமேல் இவளுடன் பேசக்கூடாது. ஆனால் இவர் ஏன் இப்படி இருக்கிறார்?

(ஏக்கத்துடன் வானை நோக்குகிறாள்)

**மூன்றாம் அங்கம்**

**(தேவலோகம்,** நந்தவனத்தில் பூஞ்செடிகள் அடர்ந்த ஓர் இடம். இளவேனிலின் தேவதையாகிய வசந்த மஞ்சள் உடை தரித்திருக்கிறான். கழுத்தில் பூமாலை அணிந்திருக்கிறான். வெள்ளைக் கலையுடுத்திய சந்திரன் அவனுடன் வார்த்தையாடிக்கொண்டிருக்கிறான். அந்திமயக்கம் போன்ற காலம்).

சந்திரன்: என்ன, வசந்தா, அகாலத்தில் இங்கு வந்திருக்கிறாய்?

வசந்தன்: நான் நந்தவனத்திற்கு வருவதில் காலவரை இருந்தாலல்லவா நான் வருவது நல்லது போவது அகாலமாகப் போகிறது. நந்தவனம் என்னுடைய வாசஸ்தலம்... அது சரி, நீ எங்கே, இப்படி.... பொழுது போகவில்லையா? (புன்னகையுடன்) தாரை... சௌக்கியந்தானே?... பூலோகத்தில் உன் ஆதீனம் எப்பொழுதும் போல வலுத்துத்தானே இருக்கிறது?

சந்திரன்: ஒன்றுக்கும் குறைவு இல்லை என் மேனியைத் தவிர! இந்திரன் ஏதோ என்னிடம் பேச வேண்டும் என்றானாம். இங்கே வருகிறதாகச் சொன்னானாம்-இன்னும் காணவில்லை. எனக்கு நாழியாகிவிட்டது; பூலோகம் போக வேண்டும். அதோ... மன்மதன் அல்லவா வருகிறான்!

(மன்மதன் ரதியுடன் வருகிறான். வில்லும் கையுமாக இருக்கிறான். இருவரும் மங்கலான உருவத் தோற்றத்துடன் காணப்படுகிறார்கள்).

வசந்தன்: ஏய், மன்மதா! உனக்கு இங்கே என்னடா வேலை? பூலோகத்தில் தான் உன் வெற்றிக்கொடிகட்டிப் பறக்கிறதே!

மன்மதன்: அப்படி நினைக்காதேயும், வசந்தரே! இதோ இருக்கிறாரே; நிலாக்காரர், இவரும் நானும் ஓர் இடத்திலே சேர்ந்தால் போதுமே, அது சிவத்தின் சந்நிதியானாலும் என் நாடகமேடை தான்.

சந்திரன்: அதென்னடா, அவரை விட்டுவிட்டுப் பேசுகிறாய்? வசந்த மாதவரும் நம்முடன் சேர்ந்த ஆசாமிதான். அதென்ன, நீ சுத்த நன்றி கெட்டவன் போலிருக்கிறதே?

மன்மதன்: (பயந்த பாவனையுடன்) என்ன, என்ன?

சந்திரன்: (போலிக் கோபத்துடன்) அதோ உன் தூணியில் துலங்குகின்றனவே அந்தப் பஞ்சபாணங்களும் யாரால் தயார் செய்யப்பட்டனவென்று எண்ணுகிறாய்? வசந்தர் கையாலே இந்த உலைக்கூடத்தில் தயார் செய்யப்பட்டன, மறந்து விட்டாயோ?

வசந்தன்: (மனஸ்தாபக் குறியுடன்) ஒருவர் பேரிலும் பிசகில்லை. அகம்பாவத்தின் பிசகு. நான் இல்லாவிட்டால் இவன் குட்டிக்கரணம் போட்டாலும் இவன் ஜபம் சாயாது என்பதை அறியவில்லை. சிறுபிள்ளை! ரதி! உன் அகமுடையான் கர்வத்தைப் பார்த்தாயா?

ரசி: அவர் கிடக்கிறார், மாமா! அவருக்கு என்னவோ கொஞ்ச காலமாகத் தலைகால் தெரிகிறதில்லை. ஈசுவரனையே ஒரு ஆட்டு ஆட்டிவிட்டோமென்ற மிதப்பு!

வந்தன்: போகிறான்! அங்கேயும் நான் எவ்வளவு உபகாரம் இவனுக்குச் செய்திருக்கிறேன்; கிடக்கட்டும். எதற்காக இங்கே வந்தீர்கள்?

மன்மதன்: அவ்வளவு கோவித்துக்கொள்ளலாமா? இந்திரன் கூட்டிக்கொண்டு வரச் சொன்னாரென்று மாதலி வந்து சொன்னான். என்ன சமாசாரமோ தெரியவில்லை... அதோ வந்துவிட்டாரே!

(இந்திரன் வருகிறான். வஜ்ராயுதம் கையில் இருக்கிறது)

இந்திரன்: (வேகத்துடன்) வெகு நாழிகை காத்துக்கொண்டிருக்கிறீர்களோ, இல்லையே? இந்திராணி ஏதோ தொல்லைப்படுத்திக்கொண்டிருந்தாள். (சலிப்புடன்) அவளுக்குச் சமாதானம் சொல்லிப்போக; சொல்லிவிட்டுவர இவ்வளவு நேரமாகிவிட்டது. மன்தா, இங்கே வா!

மன்மதன்: என்ன? (அருகில் வருகிறான், ரதியும் வருகிறாள். சந்தனும், சந்திரனும் உலவ ஆரம்பிக்கிறார்கள்.

இந்திரன்: உன் உபகாரத்தையும் நான் எதிர்பார்க்கும் காலம் வந்திருக்கிறது. பார்! எவ்வளவு நாளாக உனக்கு என் மேலே நாட்டம்? கடைசியாக என் மேலேயே பாணம் தொடுத்துவிட்டாயே!

மன்மதன்: நீங்கள் சொல்வது எனக்கு அர்த்தமாக வில்லையே!

இந்திரன்: எப்படி ஆகும்? சரி, போகிறது! அதற்காக நான் வருந்தவில்லை. ஏனென்றால் நீ எனக்காகத் தேர்ந்தெடுத்திருக்கும் ரூபம் மானுஷமாக இருந்தாலும் அபூர்வம்!

மன்மதன்: என்ன சொல்கிறீர்கள்?

இந்திரன்: போடா, போக்கிரி! அந்த அகலியை-கௌதம ரிஷியின் பத்தினி-என்ன, ஒன்றும் அறியாதவன் போல் விழிக்கிறாய்? தேவ ஸ்திரீகளுக்கும் இல்லாத அங்க சௌந்தரியத்துடன் கூடிய மாது என் மனத்தைக் கவர்ந்துவிட்டாள்.

மன்மதன்: (கேலியாக) எனக்கு வெட்கமாக இருக்கிறது. ஊர்வசி எங்காவது பக்கதில் இருக்கப் போகிறாள்!

சந்திரன்: (பாதி குத்தலுடன்) இந்திரா, உமக்குப் புத்தி இப்படிப் போக வேண்டுமா?

இந்திரன்: (கோபத்துடன்) நீ வெகு யோக்கியன்! எனக்கு உபதேசம் பண்ண வந்துவிட்டாய், போடா!

வசந்தன்: (கேலியாக) நீ அனுபவிக்கும் நித்திய சுகம் புளித்துப் போய்விட்டது. அப்படித்தானே? தெவிட்டாத சுகம் தெவிட்டிவிட்டது! ஊர்வசி உபயோகமில்லை. அகலியை அற்புதமாக்கும்! ரொம்ப அழகாயிருக்கிறது!

இந்திரன்: உங்களுக்கு என்ன தெரியும்? சதா இதே அனுபவத்திலிருக்கிறீர்கள் என்று பேர்தான். ஓர் இழவும் இல்லை.

சந்திரன்: (போலி வேகத்துடன்) ஆமாம், ஆமாம்! தேவாமிருதம் சப்பென்றுதான் இருக்கிறது!

வசந்தன்: முன்போலவே அப்ஸரஸ்கள்எல்லாம் விகாரமாகத் தானப்பா இருக்கிறார்கள்! இந்திராணி-மகா புத்தியற்றவள்.

இந்திரன்: என்னைக் கேலி செய்கிறீர்களா?

சந்திரன்: இல்லையே, வாஸ்தவமாக எனக்கே இந்த நித்தியச் சடங்கு பிடிக்கவே இல்லை. ஒரு சாபத்தையாவது அடைந்து பூலோகத்தில் போய் நிம்மதியாகக் கொஞ்ச காலம் இருக்கலாம். பொழுது விடிந்தால்-பொழுது விழுந்தால் பிரயாணம், பிரயாணம் ஓய்வற்ற பிரயாணம்! இதில் கிரகணம் வேறே-சை! பிராணனைக் கூட விட்டுவிடலாம் மனிதனாயிருந்தால்! (முகத்தை; சுளித்துப் புன்னகை புரிகிறான்).

வசந்தன்: என் பாடுதான் என்ன; சுகம் என்கிறாயா? பூலோகத்தில் வருஷம் என்கிறார்களே, அதில் மூன்று மாதம் அங்கே ஆஜர் கொடுத்தாக வேண்டும். பாக்கிக் காலமெல்லாம் இந்த நந்தவனத்திலே கைதியாகக் கிடக்க வேண்டும். ஏதாவது வேடிக்கையா, விநோதமா? கண்ணிமை கொட்டாமல் இதென்ன ஜீவனம்! இந்த இந்திரனாவது அடிக்கடி வருகிறானா? எல்லோருக்கும் காரியம் இருந்தால்தான்.

(போலியாகப் பெருமூச்செறிகிறான்)

இந்திரன்: நீங்கள் ஒப்பாரி வைக்கவா உங்களை நான் இங்கே கூப்பிட்டேன்?

மன்மதன்: நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்! அவர்கள் கிடக்கிறார்கள்.

இந்திரன்: மன்மதா! என்னால் உன் உபத்திரவத்தைத் தாங்க முடியவில்லை. ஆகையால் உடனே பூலோகத்துக்குப் போ.

மன்மதன்: ஆஹா! இதோ போகிறேன், வா, ரதி!

(போக எத்தனிக்கிறான்)

இந்திரன்: அடே, இரு பூராவும் சொல்கிறேன்.

மன்மதன்: இருக்கிறேன்.

(திரும்பி வருகிறான்).

இந்திரன்: அந்த அகலியையின் பேரிலும் உன் பாணங்களைப் போடு.

மன்மதன், ரதி: சிவ, சிவ!

(காதை பொத்திக்கொள்கிறார்கள்)

இந்திரன்: அவளை மேன்மேலும் அடித்துத் துன்புறுத்து, சந்திரா, நீ போய், பூர்ண கலையுடன் பிரகாசித்து அவளுடம்பில் தீயேற்று பற்றி எறியச்செய்!

சந்திரன்: பாவம்!

இந்திரன்: வசந்தா, நீயும் போ! கூட இருந்து புஷ்பங்களை எல்லாம் அழகாக புலரச் செய்து மணவெறி ஊட்டு. அவள் மதியைத் தென்றலால் மயக்கு! என்ன?

வசந்தன்: (ஆத்திரத்துடன்) சொல்லும்!

இந்திரன்: சுருங்கச் சொல்கிறேன். மூன்று பேரும் சேர்ந்து அவளை மோக பரவசமாக்குங்கள்! நான் வருகிறேன். அவள் தவிக்கும் தறுவாயில் என் உள்ளத்தை வெளியிட்டு அவளை வசப்படுத்துகிறேன். இல்லாவிட்டால் லேசில் இணங்கமாட்டாள். அவளை ஸ்வாதீனமற்றவளாகச் செய்தால்தான் என் எண்ணம் நிறைவேறும்

வசந்தன்: (முன்போல) ஏங்காணும் உமக்கு இந்தப் புத்தி?

சந்திரன்: இதற்காகவா என்னை இங்கேவரச் சொன்னீர்?

ரதி: கர்ண கடூரமாயிருக்கிறது, கேட்க முடியவில்லை. நான் போகிறேன்.

(போகிறாள்)

மன்மதன்: ரதிக்குப் பிரியமில்லை. அவள் இல்லாவிட்டால் என்னால் மட்டும் தனியாக ஒன்றும் செய்ய

முடியாதேன்னா?

இந்திரன்: (மனஸ்தாபம் காட்டி) உம், நீங்கள் என் பரிவாரம் என்று பேராக்கும்!

வசந்தன்: பரிவாரமென்றால்-நன்றாயிருக்கிறதே!

இந்திரன்: நீங்கள் ஒத்தாசை செய்வீர்களா, மாட்டீர்களா?

வசந்தன்: செய்யாவிட்டால்?

இந்திரன்: பிறகு தெரியும்.

வசந்தன்: நான் வேண்டுமானால் நந்தவனத்தை விட்டுப் போய்விடுகிறேன்.

சந்திரன்: நீ என் தலையை வாங்கி விட முடியாது!

மன்மதன்: நான் மனத்தில் இருப்பவன்!

இந்திரன்: நீங்கள் எனக்கு ஒத்தாசை செய்யாவிட்டால் வஜ்ராயுதத்தால் இப்பொழுது என் உயிரை-

மன்மதன்: அப்படியெல்லாம் ஒன்றும்-ஊர்வசியைக் கூப்பிடட்டுமா?

இந்திரன்: (சலிப்புடன்) நீங்கள் ஒத்தாசை செய்ய வேண்டாம் போங்கள்.

வசந்தன்: எனக்கு என்ன? நான் பூலோகத்திற்குப் போக வேண்டிய காலந்தான், போய்விடுகிறேன்.

சந்திரன்: எனக்கும் இன்று பௌர்ணமி-போகிறேன்.

மன்மதன்: என்னால் ஒன்றும் கெட வேண்டாம். என் கடமையைச் செலுத்தி விடுகிறேன்.

வசந்தன்: போகலாமா? வேறு விசேஷம் இல்லையே?

இந்திரன்: போகலாம்!

(சந்திரன், வசந்தன், மன்மதன் மூவரும் போகிறார்கள்)

இந்திரன்: (மெய்ம்மறந்து) அகலியே! உன் இணையற்ற அழகை நான் அடைவேன்!

**நான்காம் அங்கம்**

**(அமராவதியில்** ரம்பையின் அந்தப்புரம், ரம்பை, ஊர்வசி, மேனகை, இந்திராணி எல்லோரும் உட்கார்ந்துகொண்டு பேசுகிறார்கள்)

ஊர்வசி: ஏதுக்கடி இவ்வளவு அவசரமாகக் கூப்பிட்டு விட்டாய்?

ரம்பை: தேவராஜன்-பூலோகத்தில் இருக்கிறாளே அகலியை- யாரோ ஒரு ரிஷியின் பத்தினி-அவள்மேல் மையல் கொண்டு விட்டாராம்!

ஊர்வசி: உம்,சொல்லு, அப்புறம் சேர்ந்தாற்போலச் சிரிக்கிறேன்.

ரம்பை: மன்மதனை உதவி செய்ய வேண்டுமென்று கேட்டாராம். ரதி கோபித்துக்கொண்டு வந்துவிட்டாள். என்னிடம் சொன்னாள்.

மேனகை: என்னடி கேலிக்கூத்தாக இருக்கிறது சொன்னவர்கள் சொன்னால் கேட்போருக்கு மதி வேண்டாமா? இந்திர லோகம் பூலோகமாகி நாமெல்லாரும் கிழவிகளாகிவிட்டால் அப்படி நடக்கலாம் ஒருவேளை!

ஊர்வசி: (யோசனையுடன்) இருடி, அப்புறம்!

ரம்பை: அப்புறம் எனக்குத் தெரியாதம்மா. வேறொன்றும் தனக்குத் தெரியாதென்று ரதி சொல்லிவிட்டாள்.

ஊர்வசி: என்றைக்கும் உனக்குச் சாமர்த்தியமே கிடையாது.

ரம்பை: என்னவோ அம்மா! நீ கெட்டிக்காரி, பூலோகமெல்லாம் போய் இருந்து விட்டு வந்தவள். அமராவதியை விட்டு அந்தண்டை போனதில்லை நான். எனக்கு என்ன தெரியப்போகிறது?

மேனகை: பாரடி இவள் பேசுகிறதை! நாம் பூலோகத்துக்குப் போய்விட்டு வந்தவர்களாம். இவள் மாத்திரம் படி தாண்டாப் பத்தினி சுத்தமான-அபசரஸ்!

ஊர்வசி: அது கிடக்கட்டும், தேவராஜன் அகலியையிடம் காதல் கொள்ளக் காரணம் என்ன?

மேனகை: அதானடி, அவள் கலியாணத்தப் பொழுதே போட்டி. தவ மகிமையால் கௌதமர் அவளை அடித்துக்கொண்டு போய்விட்டார். இந்திரனுக்குக் கோபம். எப்படியாவது அவளை அடைந்துவிட வேண்டுமென்று பிடிவாதம்.

ஊர்வசி: அவளைப் பார்த்திருக்கிறாயோ நீ? எப்படி இருப்பாள்?

மேனகை: உம், என்னவோ இருப்பாள். கண்கள் குறு குறு வென்று இருந்து விட்டால் ஆய்விட்டதாக்கும், எல்லாம் நம்மைவிட ஒன்றும் பிரமாதமில்லை.

ஊர்வசி: தேவராஜனே மோகித்துப் போகும்படியாக அவளிடத்தில் என்ன பசப்பு இருக்கக்கூடும்? என்ன அவ்வளவு வசீகரத் தன்மை?

ரம்பை: அதெல்லாம் எப்படிச் சொல்ல முடியும்? ரூபத்தில் மட்டுந்தான் மனது ஈடுபடுகிறது என்று இன்னும் நீ நினைக்கிறாயா?.. கோபித்துக் கொள்ளாதே, நீ எப்படிப் புரூரவசிட காதல் கொண்டாய்? தேவதைகளைக் காட்டிலுமா அவன் அழகு?

மேனகை: இவள் சொல்லிக் காட்டுகிறதைப் பார்!

ரம்பை: எண்ணம் விழுந்துவிட்டால் கண் கிடையாது; ரூபங்கூட அவசியமில்லை. ஆனால் ஒருவேளை இப்படி இருக்கலாம்.

ஊர்வசி: எப்படி?

ரம்பை: வாடா மல்லிகைக்கும் வெறும் மல்லிகைக்கும் வித்தியாசம் பார்த்தாயா?

ஊர்வசி: ஆமாம். வாடா மல்லிகைக்கு வாசனையே கிடையாது. சருகுபோல இருக்கிறத. மல்லிகை மிருதுவாகத் துவண்டு வாசனை கொண்டிருக்கிறது. அதுபோல?

ரம்பை: நான் வாடா மல்லிகை. அகலியை வாடித் துவண்டு கொடுக்கும் மல்லிகைப் போல் இருக்கிறாள்.

ஊர்வசி: ரம்பே! நீ சொல்வதுதான் உண்மை. அதுதான் சரி. சாவில் உயிர் இருக்கிறது. சாவற்றதில் உயிர் இல்லை நிஜந்தான்! அழகுள்ள தேவலோகப் பூ! சதா இமை கொட்டாது மீன்கள் போல சாப்பாடு இல்லாமல்! சாப்பிட்ட அமிர்தங்கூடப் பசி கொடுக்கிறதில்லை என்று புரூரவ மகாராஜனின் தோழன் விதூஷகன் சொல்வதுண்டு. அதுபோல தேவராஜனுக்கு அமர கன்னிகைகளைக் கண்டு சலிப்பு ஏற்பட்டுவிட்டது. மங்காத எழிலைக் கண்டு எரிச்சல் வருகிறது அவருக்கு.

ரம்பை: அதற்காக?

ஊர்வசி: அகலியையின் சுகத்தை வேண்டுகிறார். நித்திய சுகத்தில் அவருக்கு வெறுப்புத் தட்டிவிட்டது.

ரம்பை: தேவராஜனுடைய இச்சையில் பிசகல்லவா?

ஊர்வசி: பிசகென்றால் அவர் என்ன செய்வார்? மனத்தைத் தடுக்க யாரால் முடியும்?

ரம்பை: மனத்தைத் திருப்தி செய்ய அடாது செய்வதா என்ன?

மேனகை: பூலோகத்தாரைப் போல் தேவதைக்கு அடாதென்பதே இல்லை. நமது உலகம் மனித தர்மத்தை மீறினது ஞாபகம் இல்லையா?

ரம்பை: மனித உலகத்தோடு சம்பந்தம் இல்லாத வரையில் சரி. இந்த விஷயத்தில் தேவராஜன் மட்டுமல்லவே. ஒரு பேதை மனுஷ்யப் பெண்ணுமல்லவோ சம்பந்தப் படுகிறாள்? அவள் கதி என்ன ஆவது? அவள் மனித தர்மப்படி குற்றம் செய்கிறவள் ஆவாள், அல்லவா?

ஊர்வசி: நானும் நீயும் சொன்னால் தேவராஜன் நின்று விடுவாரோ?

ரம்பை : அதற்குச் சொல்ல வரவில்லை நான். அந்தப் பெண்ணைப் பற்றி இரக்கப்படுகிறேன்.

ஊர்வசி: இரக்கம் என்ன! தேவராஜனே போய் காலில் விழும்பொழுது என்ன குறை?

ரம்பை: நன்றாயிருக்கிறது ஊர்வசி நீ சொல்வது! நமக்குத்தான் தேவராஜன் தெய்வம். அவளுக்குத் தெய்வம் பூலோக ரீதியாக அவளுடைய கணவன் அல்லவா?

ஊர்வசி: அவளுக்கு அந்த மாதிரித் தோன்றினால் தேவராஜனைப் புறக்கணிக்கிறாள், உனக்கு என்ன கவலை?

ரம்பை: தேவராஜனே முனைந்துவிட்டால் அவளால் என்ன செய்யக்கூடும்? பருவமும் பிறையும் அவளுக்கு விரோதமாயிருந்தால்? ஊர்வசி: அதெப்படி?

ரம்பை: வசந்தன், சந்திரன், மன்மதன் மூவரும் தேவராஜனுக்கு ஒத்தாசை செய்கிறார்கள்.

ஊர்வசி: ஐயோ, பாவம்! நாலு தேவதைகள் ஒரு பக்கம், அபலையான ஒரு மனிதப் பெண் மற்றொரு பக்கமாக, இது கொடுமைதான்.

மேனகை: நல்ல வேடிக்கை!

ரம்பை: நமக்கு வேடிக்கையாக இருக்கலாம். அவளுக்கு உயிரழிவு! தேவதைகளுக்கும் ஒரு கட்டுப்பாடு

வேண்டாமா?

ஊர்வசி: அது கிடக்கட்டும். நாம் இவ்வளவு பேர் ஈசல்கள் போல இங்கே அடைந்து கிடக்கிறது என்ன பிரயோஜனம்? அவள் ஒருத்தி கீழே இருந்து மயக்கிவிட்டாளே. அவள் சுந்தரியா, நாம் சுந்தரிகளா? இந்திராணி வாயையே திறக்கவில்லையே!

இந்திராணி: வாயைத் திறப்பதற்கு என்ன இருக்கிறது, மனிதப் பெண்ணாயிருந்தால் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாவாள். நாம் என்ன செய்வதற்கு இருக்கிறது?

**ஐந்தாம் அங்கம்**

**(இளவேனிற்** காலத்துப் பௌர்ணமி இரவு. கௌதமரின் ஆசிரமத்திற்கு முன் கொடிகள் மண்டிய புல்லுத்தரையில் கௌதமரும் அகலியையும் சற்று உயர்ந்த மேடைகளில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள் கௌதமர் வேண்டா வெறுப்பாக உட்கார்ந்திருப்பவர் போலக் காணப்படுகிறார்; அகலியை, தன்வசமற்றவள் போல ஏக்கம் கொண்டு, சாய்ந்த வண்ணம் வார்த்தையாடுகிறாள்.)

அகலியை: இன்று பார்த்தீர்களா, நிலவு எவ்வளவு மனோகரமாயிருக்கிறது? பூரணசந்திரன், என்றும் இந்த மாதிரி முத்து வெள்ளை பூத்ததுபோலப் பிரகாசித்ததில்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

கௌதமர்: (அசட்டையுடன்)இலையுதிர் காலத்தில்தான் சந்திரிகை மிகவும் பிரகாசமாக இருக்கும் என்பார்கள். உனக்குத் தனியாக இதில் விஷேம் தென்படக் காரணம் என்ன?

அகலியை: (எழுந்த மனஸ்தாபத்தை அடக்கிக்கொண்டு) ஆனால் அதற்குக் காரணம். ஒளியில் ஒன்றும் விசேஷமில்லையா?

கௌதமர்: தோன்றவில்லை. உன் மனத்தின் உற்சாகந்தான் அதற்குக் காரணம் ஒளியில் ஒன்றும் விசேஷமில்லை!

அகலியை: அதுதான் அப்படி என்கிறீர்கள். இவ்வருஷத்திற்கே, முதல் முதலாக, இன்றுதான் மல்லிகை புஷ்பித்திருக்கிறது. அதன் வாசனை அசாத்தியமாக இருக்கிறது... அல்லவா? சம்பங்கியின் லேசான மணங்கூட இன்று கம்மென்று கிளம்புகிறது. இந்தப் பாரிஜாதங்கள் இன்று என்னவோ நந்தவனத்தின் பாரிஜாதங்களே போல ரமணீயமாய் இருக்கின்றன... அப்பா மனசே மயக்கம் கொள்ளுகிறாற் போலியிருக்கிறது. பிரகிருதியே என்ன சௌந்திரியத்தைக் கொண்டிருக்கிறது.

கௌதமர்: (புன்சிரிப்புடன்) வசந்த காலத்திற்கு ஏற்பட்ட சின்னங்கள் தானே! இதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? எனக்கு விளங்கவில்லை.

அகலியை: (கவனிக்காமல், தனக்குத்தானே சொல்லிக்கொள்பவள் போல) சந்திரகிரணங்களால் சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டு இருட்டு மரத்தடியில் கிடக்கிறது! மலயா சலத்திலிருந்து வருகிறது என்கிறார்களே இந்த இளம் தென்றல், இதில் ஏதோ ஓஷதி சக்திதான் இருக்கிறது. ஆனால் ஏக காலத்தில் உடம்பின் துயரத்தை அகற்றி மனத்தில் ஒருஜீவ வேகத்தையும் உண்டாக்குகிறது..

கௌதமர்: எனக்கு ஒன்றும் நீ சொல்வது போல கிளர்ச்சி ஏற்படவில்லை.

அகலியை: அந்தக் காற்றில் கலந்து ஏதோ ஒரு தூரத்து நுண்ணிய மணம் மிதந்து வருகிறது....

கௌதமர்: கங்கையின் கரையோரத்தில் புஷ்பித்திருக்கும் தாழைகளின் மணம்! அது ஒன்றும் அபூர்வமில்லை.

அகலியை: (கவனியாமல்) ஆஹா! கங்கையின் கலகல சத்தம் இந்த நிச்சப்தத்தில் இங்கே கேட்கிறது. அதில்கூட என்ன கான ருசி! இவைகளின் காரணமாக, மனத்தில் எப்பேர்ப்பட்ட சுத்தமான தெள்ளிய ஆனந்தம் பொங்கி எழுகிறது!

கௌதமர்: இதல்ல சாசுவதமான ஆனந்தம்-நித்ய ஆனந்தம் பிரகிருதியில் கிடைக்காது. திடீரென்று இந்தத் தென்றலும், தெவிட்டலும், மனமும், மாதுரியமும் ஸ்வப்பனம் போல மறைந்துவிடும். ஏமாற்றமே மிஞ்சும். ஆகையால் நீ அனுபவிக்கும் இந்த க்ஷண சுகத்தை நிரந்தரம் எனக்கொள்வது தவறு.

அகலியை: (சமாதானமற்று) பின்?

கௌதமர்: நமது நியமத்தால் ஏற்படும் நிரதிசயானந்தமே சாசுவதம்! அதைத்தான்நாம் சதா அடைய முயல வேண்டும்.

அகலியை: அதற்காக இதைப் புறக்கணிக்க வேண்டிய அவசியம் உண்டா? இதிலும் ஈடுபடுவதில் என்ன தவறு?

கௌதமர்: (கண்டிப்புடன்) இது கேவலம் இந்திரியத் திருப்தி. இது பிரயோஜனமில்லை. நீடிக்காது.

அகலியை: இந்தத் திருப்தியை நித்தியமாக்க முயன்றால்?

கௌதமர்: (புன் சிரிப்புடன்) பேதை போலப் பேசுகிறாய்? அது எப்படி முடியும்? நீடித்தாலும் ருசியற்றுப் போகும். தித்திப்பை உண்டால் திகட்டுகிறதல்லவா?

அகலியை: நீங்கள் கூறும் ஆனந்தம் மட்டும்?

கௌதமர்: தெவிட்டா இன்பம்!

அகலியை: எப்படி உணர்வது இந்திரியம் இல்லாமல்? கௌதமர்: ஞானேந்திரியங்களால்!

அகலியை: நீங்கள் இகழும் இந்திரியங்களின் சேர்க்கை இல்லாவிட்டால் மனசு ஏது? சுவரில்லாமல் சித்திரமேது?

கௌதமர்: தத்துவ விசாரணை செய்வதற்கு உனக்குத் தேர்ச்சி போதாது. ஆகையால் அதைப் பற்றிப் பேசுவதில் உபயோகமில்லை.

அகலியை: ஏன்? எதனால்?....சரி,அது கிடக்கட்டும். தத்துவம் வேண்டாம் இப்பொழுது! நிதர்சனமான இன்பத்தில் சற்று லயிப்போம், பாதகமில்லை!

கௌதமர்: அர்த்த ராத்திரியில் நான் நம் பிரதாமகனான சந்திரனுக்குச் சோம ஹோமம் செய்ய வேண்டும் வா, உள்ளே போகலாம். சோமோ வை ந: பிதா!

அகலியை: அவர் இங்கு வெளியே பிரத்தியட்சமாக இருக்கிறாரே. இங்கேயே அவருடைய கிரண பாதங்களில் வணங்கி ஈடுபடுவோமே.

கௌதமர்: நியமத்துடன் கூடிய கர்மாதான் பயனளிக்கும்.

அகலியை: சற்றுக் கழித்துப் போகலாமே! என்னவோ என் தேகம் இப்பொழுது மயிர்க் கூச்செறிகிறது. பரவசமாகிறேன். இங்கே இருங்கள்!

கௌதமர்: (எழுந்து) நீ வேண்டுமானால் சற்று இருந்து வா, நான் போகிறேன். எந்தக் காரணம் கொண்டு நியமம் தவறக் கூடாது.(போகிறார்)

அகலியை: என்னே, மகரிஷியின் மனப்போக்கு! இது கேவலம் நியமத்தைக் காட்டிலும் எவ்வளவு உத்கிருஷ்டம்! இதே ஒருவிதமான சாட்சாத்காரமாச்சே!

பிரகிருதியின் குரல்: நீ சொல்வது சத்யம்-நீ சொல்து உண்மை. என் தரிசனமே விச்வரூப தரிசனம்-என்னுடைய ஒவ்வோர் அம்சத்திலும் ஆனந்தம், தேகத்தில் ஜீவன் போல, அலைந்து கொண்டிருக்கிறது. பிரம்மம் என்ற நித்திய பொருள் என்னுள்ளே பலகோடி ஜீவன்களாகப் பிரிந்தும் ஒன்றாகவும் இருக்கிறது. துணியில் நூல்கள் பிரித்தும் சேர்த்தும் இருப்பது போல!

அகலியை: (பிரமித்து, அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு) யார் பேசுகிறது?

பிரகிருதியின் குரல்: நான்தான் பிருகிருதி-உன் தாய், உன் உணர்ச்சிகளும் எண்ணங்களும் மிகவும் நேரானவை கௌதமர், பாவம்! கானல் நீரைத் தேடி அலைகிறார். உன்னையும் அதிருப்தி கொள்ளச் செய்கிறார். அவருடைய லட்சியம் சரி என்றே வைத்துக்கொண்டாலும் என்னையும் அணைத்துச் செல்லாமல் அவர் தனியே செல்வது ஆபத்து. உன்னைத் திக்குத் தெரியாத காட்டில் விட்டு; சென்றால் நீ என்ன செய்வாய்? உணர்ச்சிகளுக்கு அடிமையாயிருக்கும் மங்கை என்ன செய்வாள் என்பது அவளுக்கே தெரியாது.

அகலியை: இன்று ஏன் இந்த அபூர்வ நிகழ்ச்சிகள்?

பிரகிருதியின் குரல்: வசந்தனும் சந்திரனம் சேர்ந்தார்போல வந்து உன் அழகின் ஆஜர் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் முன்னால் வந்தால் பின்னால் மன்மதன் வராமல் இருப்பானா? பெண்ணே! ஜாக்கிரதையாக இரு! மனம் தடுமாறும். இயற்கை ஏமாற்றும். உணர்ச்சி உணர்வை அழிக்கும்.

அகலியை: இன்று ஏன் இந்த ஆபூர்வ நிகழ்ச்சிகள்?

பிரகிருதியின் குரல்: வசந்தனும் சந்திரனும் சேர்ந்தார் போல வந்து உன் அழகின முன் ஆஜர் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் முன்னால் வந்தால் பின்னால் மன்மதன் வராமல் இருப்பானா? பெண்ணே! ஜாக்கிரதையாக இரு! மனம் தடுமாறும். இயற்கை ஏமாற்றும், உணர்ச்சி உணர்வை அழிக்கும்.

அகலியை : உண்மைதான் என்னுடைய எண்ணங்களும் ஏக்கங்களும், என் கட்டில் அடங்காமல், இந்த நிலவைப் போலவே கரை கடந்து ஓடுகின்றனவே! நான் ஸ்வாதீனமற்றுக்கூடப் போய் விட்டேன் போலிருக்கிறதே! (காது கொடுத்து) அதென்ன? அகாலத்தில் சக்கிரவாகமா அப்படி விரகத்தால் வீரிடுகிறது? ஆ... இந்த இன்ப வேதனையை

என்னால் தாங்கமுடியவில்லை. அவர் ஏன் என்னைத்தனியாக விட்டுவிட்டுப் போனார்? கூடாது. அது தப்பு. நியாயமில்லை... கொடுமை! அப்பா இந்த மணம் என்னை மதுவைப் போல மயக்குகிறது. சூரிய வெளிச்சத்தில் ரத்தினங்களைப் போல என் அங்கங்கள் இந்தச் சந்திரிகையில் சுடர் விட்டு எரிகின்றன. மயிர்கூச்சு என்னை உதறியெடுக்கிறது. என்னால் தாங்கமுடியவில்லை. மகரிஷியே! என்னை நீங்கள் காக்க வேண்டிய தருணம் இது. வாருங்கள், வாருங்கள்!

பிரகிருதியின் குரல்: அவர் வரமாட்டார், பெண்ணே, அவருக்கு நியமம் உன்னைக் காட்டிலும் முக்கியம்.

அகலியை: இல்லை, வருவார். என் விரகக் குரல் அவருக்கு அறிமுகமானது. வருவார்!

(இந்திரன் பின்பக்கமாக வருகிறான். திரும்பிப் பாராமல் காலடிச் சத்தத்தைக் கேட்டு)

ஆ, வாருங்கள்! என்னைத் தாங்குங்கள்! என்னால் தாங்கமுடியவில்லை இந்த இன்ப வேதனையை!

(பின்புறமாக இந்திரன் கைகளில் சாய்கிறாள். பிரகிருதியின் குரல் வீரிட்டு அடங்குகிறது. மௌமான பொருமல் பரவுகிறது. சந்திரன் மேகத்தில் மறைகிறான்; நிலவு மங்கிவிடுகின்றது. திடீரென்று அலைக்காற்று வீசுகிறது. காட்சி இருண்டு மங்குகிறது. க்ஷணம், மறுபடியும் காட்சி ஒளி கொள்கிறது. நிலவு பரவுகிறது)

இந்திரன்: அகலியே!

அகலியை: (குரலைக் கேட்டு) இந்திரனல்லவா நீங்கள்? (பிரக்ஞை வந்தவளாகத் திடீரென்று விலகி எழுந்து நிற்கிறாள்) உங்கள் சூழ்ச்சியா இது?

இந்திரன்: மெதுவாகப் பேசு.

அகலியை: மெதுவாக ஏன் பேச வேண்டும்? ஒளி மறைவு என்ன இருக்கிறது?

(கௌதமர் பிரவேசிக்கிறார். அகலியை மௌனமாக ரிஷியின் கால்களைக் காட்டிக்கொண்டு அழுகிறாள். இந்திரன் பிரமித்து நிற்கிறான்.)

கௌதமர்: தூர நில், நீ சீலமற்றவள்!

அகலியை: நான் சுயப்பிரக்ஞையுடன் அபராதம் செய்யவில்லை.

இந்திரன்: பிரபோ! நான்தான் காரணம்.

கௌதமர்: விரத பங்கமடைந்தவளே! எந்த இந்திரியங்களின் மதத்தால் நீ மெய்ம்மறந்து இந்தக் கதியானாயோ அவைகள் அழிந்து உணர்வற்று இங்கேகல் போலக்கிட, நான் ஹிமாசலம் செல்கிறேன்.

அகலியை: நான் குற்றவாளியா? கதிமோக்ஷம் இல்லையா?

கௌதமர்: காலம் உன்னைப் புனிதமாக்க வேண்டும். அன்பின் அடிச்சுவடுகள் உன்னைக் கரையேற்றும்.

பிரகிருதியின் குரல்: அம்மா, வா: என் மார்பில் எனக்கு இடம் இருக்கிறது!

## ஆறாவது அங்கம்

**(ஹிமாலயத்தின்** சாரல். பனிக்காலத்தின் இறுதி. தவத்திலிருந்து கௌதமர் கண் விழித்து எழுந்து நின்று சுற்று முற்றும் பார்க்கிறார்)

கௌதமர்: என் தவம் ஏன் கலைந்தது? அது கலைவதற்கும் காரணமாக இங்கு ஒன்றுமே காணவில்லையே! பிரகிருதியே பனிபடிந்து படிகம் போல உயிரற்றுத் தூய்மையாக இருக்கிறதே! ஓர் இந்திரியமாவது சலிப்பதற்கு இங்கே இடமே காணவில்லையே!

பிரகிருதியின் குரல்: நான் படிகம் போல இருக்கிறேன். உம்மைப் போல எனக்கும் இந்திரியங்கள் அடங்கிக் கிடக்கின்றன. ஆனால் மனது வித்துக்குள் இருக்கும் உயிர்போல.

கௌதமர்: மனதா! மனது என்ன செய்தது?

பிரகிருதியின் குரல்: இவ்வளவு தவத்தின் பிறகும் உமக்கு அந்த உண்மை விளங்கவில்லையா? இந்திரியங்கள் தாமாகச் சலிக்கிறதே இல்லை. மனது தான் இவைகளை அசையச் செய்யும் காற்றைப் போல இந்திரியங்களை

கௌதம்: மனோரதம் ஏதாவது இருந்தால் தானே மனம் அப்படி இந்திரியங்களைத் தூண்ட வேண்டும்?

பிரகிருதியின் குரல்: நீர் அகலியையுடன் இருந்தவரை உமக்கு மனோரதம் இருக்கவில்லை

கௌதமர்: இப்பொழுது?

பிரகிருதியின் குரல்: இப்பொழுது மட்டுமன்று, நீர் அவளைக் கல்லாக்கிவிட்டு வெளியேறின காலம் முதல் உமது

மனது உம் வசம் இல்லை. நமது தவத்தில் மனது லயம் அமைந்துவிட்டது என்று நீர் பிரமை கொண்டிருந்தீர்-அபஸ்வரத்தை அறிய முடியாதவன் சுருதி சேந்திருக்கிறது என்று விட்டதால் மனது அடங்கிவிட்டது என்று நீர் எண்ணுவது எப்படி இருக்கிற தென்றால்

கௌதமர்: எப்படிஇருக்கிறது?

பிரகிருதியின் குரல்: உம் மனது உமக்குத் தெரியாது என்பதுதானே விஷயம். அதைக் கூடவா நீர்

கௌதமர்: (திடுக்கிட்டு) என்ன? என்ன?

பிரகிருதியின் குரல்: (கோபத்துடன்) அகலியை கல்லாக கிடக்கிறாள்; ஆனால்

கௌதமர்: வேண்டாம், அந்தப் பேச்சு வேண்டாம்!

பிரகிருதியின் குரல்: பேச்சு வேண்டாமென்றால் பொருள் வருமா? நீர் சாபம் கொடுத்தீர், அவள் பெற்றாள், ஆனால் நீர் தப்பவில்லை.

கௌதமர்: இதென்ன விபரீதம்! எனக்கு என்ன?

பிரகிருதியின் குரல்: உமக்கு என்னவா? என்ன ஏமாற்றம் உமக்கு?

கௌதமர்: (பிரமித்து) உயிரற்றுக் கிடப்பது போன்று இந்த பிரகிருதி என்னை ஏன் இப்படி வாட்டுகிறது? வசந்த காலத்தில் இயற்கை மனதை மயக்கும் என்பார்கள்.

பிரகிருதியின் குரல்: உயிர் ஒரு விதமாகத் தூண்டும். சாவும் ஒரு விதமாகத் தூண்டும்.

கௌதமர்: களங்கமற்ற தூய்மை கூட அமைதியைக் குலைக்குமோ?

பிரகிருதியின் குரல்: அது குலைக்க வேண்டுமென்பதே இல்லை.

கௌதமர்: பின்?

பிரகிருதியின் குரல்: மனத்தைக் குலைப்பது அழிந்து அடியிலிருந்து பொங்கி வரும் நினைவு

கௌதமர்: அடடா! என்ன முட்டாள்தனம்! இவ்வளவு காலமாக என்னை ஏமாற்றிக்கொள்ள அல்லவா முயன்றிருக்கிறேன்! கண் மூடித்தனமாக வீணான பிரயாசை! கண் திறந்த போதல்லவா பிரகிருதி புகட்டும் உண்மை தெரிகிறது!... அகலியே, நீதான் உண்மையான தவத்தில் இருக்கிறாய்!

நான்தான் தவமென்று எண்ணி இவ்வளவு காலம் வீண்பொழுது போக்கி விட்டேன்! அன்று நாரதர் சொன்னார்-என் மனது பக்குவமாகவில்லை என்று அது வாஸ்தம்! அகலியையே சொன்னாள், பிரகிருதியில் ஈடுபட்டே உண்மையை அறியலாம் என்று-அது வாஸ்தவம்!... இன்று பிரகிருதியே படிகத் தூய்மையுடன் பளிச்சென்று தெரிவிக்கிறது நான் செய்த தவம் தவமில்லை என்று-அதுவும் வாஸ்தவம்!

பிரகிருதியின் குரல்: வாஸ்தவம், வாஸ்தவம்! கௌதமர்: சந்தேகமில்லை இப்பொழுது எனக்கு! அகலியைன்னதைக் கேட்காமல் அவளையே தண்டனைக் குள்ளாக்கினேன் நான் தண்டனை பெற்றேன்!

பிரகிருதியின் குரல்: இப்பொழுதும் காரியம் கெட்டுவிட வில்லை!

கௌதமர்: இப்பொழுதும் வழி இருக்கிறதா?

பிரகிருதியின் குரல்: களங்கம் நீங்கிய பிறகு எதற்கும் இடம் இருக்கிறது. அகங்காரம், மமதை அழிந்தால், பணிவில் பக்குவம் இருக்கிறது. பால் பொங்கி நீர் நீங்கிய பிறகு அது அடங்கும், அமைதியில் தூய்மை இருப்பதுபோல!

கௌதமர்: ஆமாம், ஆமாம்! வழி இருக்கிறது. ஆனால் எங்கே சென்று யார் மூலம் அதை அடைவேன்!

பிரகிருதியின் குரல்: அகலியையிடம் செல்லும்! அவள் மூலம் அதை அடைவீர்!

கௌதமர்: எந்த முகத்துடன் அவளை நான் பார்ப்பேன்?

பிரகிருதியின் குரல்: நீர் என்ற நினைப்பு மறந்த முகத்துடன்!

கௌதமர்: அவள் என்னை ஏற்பாளா?

பிரகிருதியின் குரல்: அகலியை என்றும் ஏற்பாள்! அது அவள் தன்மை. என் மகள் அல்லவா?

கௌதமர்: ஆ, அவள் கல்!

பிரகிருதியின் குரல்: அன்பு கல்லையும் பெண்ணாக்கும்!

கௌதமர்: அன்பு என் உதவிக்கு வருமா?

பிரகிருதியின் குரல்: அன்பு புருஷ உருவத்தில் உமக்கு உதவி புரியும்!

கௌதமர்: அந்த அன்பின் மூலம் அவளைப் பெற்று உண்மையை உணருகிறேன்.

பிரகிருதியின் குரல்: அவளும் தவமிருந்து விட்டாள். பிசகுக்குக் காரணம் அவள் அன்று. ஆனாலும் பிசகிற்காக அவளும் பிராயச்சித்தம் செய்து கொண்டு விட்டாள்.

கௌதமர்: என்று பிரமை நீங்கிவிட்டது. எனது வேட்கை தணியும் இடம் ஹிமாசலம் அல்ல; அகலியை என் அருகிலிருந்து வழி காட்டும் எனது ஆசிரம பூமி. இந்தத் தனிமை தனிமையல்ல; அவள் சேர்ந்தால் தான் எனக்குத் தனிமை.... அகலியே வருகிறேன்! எங்கு இருக்கிறாய்? கூப்பிடு! பிரகிருதியின் குரல்: அன்று முதல் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறாள். வணங்கிப் பூமியில் காது வைத்துக்கேளும், அவள் குரல் தெரியும்!

கௌதமர்: (மூர்ச்சித்துக் கீழே விழுந்து, சிறிது நேரம் கழிந்து நினைவு பெற்று) இதோ வந்துவிட்டேன்! இவ்வளவு காலமாக நீ கூப்பிட்டது எனக்குக் கேட்கவில்லை! கங்கைக்கரைக் கல்லிலிருந்து கிளம்பும் ஒலி இந்த மலைச்சாரலில் மண் மூலம் எதிரொலிக்கிறதே! கேட்கிறது! இதோ வருகிறேன்!

(எழுந்து தெற்கே கிளம்புகிறார்)

**ஏழாவது அங்கம்**

**(கங்கைக்** கரையில் பாழடைந்த ஆசிரமத்தின் முன் பிரதேசம். இளவேனிற்காலம் ஆரம்பித்துவிட்டது. துளிர்விட்டுப் பூத்திருந்த மாமரத்தடியில் கிடந்த கல்லைச் சுற்றிச் சம்பங்கிக்கொடிகள் படர்ந்திருக்கின்றன. அவற்றில் நுனி சிவந்து மெல்லிய பச்சை நிறப்பூக்கள். வண்டுகள் அவற்றைச் சுற்றி மொய்த்துக் கொண்டிருக்கின்றன. ஓர் அலைத்தென்றல் அடித்ததும் அவை கிளம்பி முறுமுறுத்து மறுபடி மலர்களில் அமருகின்றன.

(அதிகாலை கிருஷ்ண பட்சத்துப் பிறை; சந்திரன் மேல் வானத்தில் வெளுத்துத் தென்படுகிறான்)

குயில்: அக்கூ! அக்கூ!

மாமரம்: அக்கூ அக்கூ என்று ஏன் தொண்டையைக் கிழித்துக்கொள்ளுகிறாய்? அகலியை இப்பொழுது எப்படிப் பதில் சொல்லுவாள்?

வண்டு: கொடிவைத்தவள் உன்னைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை.

சம்பங்கிப்பூ: ஆச்சு, என்னைப் பார்த்து அவள் அகமகிழும் காலம் நெருங்குகிறது.

வசந்தன்: சந்திரா! கௌதமரின் சமாசாரம் என்ன?

சந்திரன்: புதிதாக என்ன? அப்பொழுதே தெரியும் எனக்கு. தம் பிசகை அறிந்து தலை தெறிக்க ஓடி வருகிறார்!

வசந்தன்: வருகிறார்! வரட்டும். ஒரு கை பார்த்து விடுகிறேன்!

சந்திரன்: நீ என்ன பார்த்துக்கொள்வது? நானல்லவா அங்கே இருந்து அவரைக் கிளப்பினேன்! அருகில் இவள் தலையில்தானே இருக்கிறேன்?

வசந்தன்: இங்கே வரட்டும்; சொல்லுகிறேன். இந்திரன் பேச்சைக் கேட்டுப் பாவம் செய்தாலும் செய்தோம். நன்றாகப் பழி தீர்த்துக் கொள்கிறேன்.

சந்திரன்: இந்தத் தடவை மன்மதன் ரதி ஒத்தாசை வேண்டாம்.

வசந்தன்: போதும், போதும்! அவர்கள் ஒத்தாசை!

சந்திரன்: அகலியை இனிமேல் நம்மை மன்னிப்பாளா?

வசந்தன்: என்னை மன்னித்துவிட்டாள். அவள் காலடியிலேயே கிடந்து சேவை செய்து விட்டேன் இவ்வளவு காலம்!

சந்திரன்: நான் போகிறேன் நேரமாகிவிட்டது!

வசந்தன்: சற்று இரு, அதோ பார் விசுவாமித்ரர் ராம லக்ஷ்மணர்களுடன் வருகிறார்கள்!

சந்திரன்: எனக்குத் தெரியுமே!

வசந்தன்: இந்த ஆசிரம பூமியில் அவர்கள் சற்றுத் தங்கும்படி இதை மனோகரமாய்ச் செய்கிறேன்

சந்திரன்: ராமன் இருக்கிற இடமே மனோகரம்.

வசந்தன்: இதோ பார், கௌதமரே வருகிறார்.

கௌதமர்: (ஆசிரம பூமியில் நுழைந்து) அகலியே, அகலியே! குயில்: அக்கூ! அக்கூ!

மாமரம்: கௌதமர் கூப்பிட்டே பதில் சொல்லவில்லையே!

வண்டு: அகலியையை யார் கூப்பிடுகிறார்கள்?

சம்பங்கிப்பூ: கௌதமர்! பனிக்காலத்தில் ஒடுங்கி இலையுதிர்ந்து கிடக்கும் என்னை இளவேனில் வந்ததும் சூரியன் வந்து கூப்பிடுவது போல.

கௌதமர்: என்னே அகலியை இருக்கும் இடத்தின் வனப்பு! திடீரென்று என் இந்திரியங்கள்எப்படி விடுதலையடைந்து மகிழ்கின்றன! என்ன அழகு, என்ன திவ்விய வாசனை, என்ன இதமான காற்று! எங்கே இருக்கிறாய்? தெரியவில்லையே எனக்கு!

வசந்தன்: தெரியும், தெரியும். இரும்!

சந்திரன்: அவரை இப்பொழுது ஏன் பாடு படுத்துகிறாய்? வேண்டிய அளவு அனுபவித்து விட்டார்!

கௌதமர்: அகலியே, நான் செய்ததெல்லாம் பிசகு! இனிமேல் என்னால் தாங்க முடியாது!... வா, என் முன்னே!

(விசுவாமித்திரர் ராமலக்ஷ்மணர்களுடன் வருகிறார்கள்)

ராமன்: ஆகா! அப்படியா யோசனையின்றிக் கௌதமர் தவறு செய்தார்?

லக்ஷ்மணன்: இந்த ஆசிரம பூமி எவ்வளவு மனோகரமாக இருக்கிறது!

விசுவாமித்திரர்: உத்தமி அகலியை தவம் செய்யும் இடமல்லவாயே!

ராமன்: (திடீரென்று எதிரே பார்த்து) அதோ இருக்கிறாளே! புகையில் மூடப்பட்ட அக்னி யீதை போல.

விசுவாமித்திரர்: எங்கே, எனக்குத் தெரியவில்லையே!

கௌதமர்: (அருகில் வந்து) மகரிஷியே, நமஸ்காரம்!

விசுவாமித்திரர்: கௌதமரா?

லக்ஷ்மணன்: அகலியை எங்கே?

ராமன்: தெரியவில்லையா? (சுட்டிக்காட்டி)அதோ! அந்தச் சம்பங்கிப் புதரில் நிற்கிறாள்!

கௌதமர்: தெரியவில்லையே!

ராமன்: தெரியவில்லையா! என்ன ஆச்சரியம்! என் கண்ணுக்குத் திவ்விய தேஜசுடன் தவக் கோலத்தில் தென்படுகிறாளே!

(ராமன் கல் அருகில் சென்று காட்டப் போகிறார். திடீரென்று எல்லோர் கண்களுக்கும் அகலியைதோன்றுகிறாள். குயில் வீிடுகிறது. மாமரம் சிலிர்க்கிறது. வண்டு முரலுகிறது. சம்பங்கிக் கொடி மலர்களை அவள் மேல் கொட்டுகிறது)

கௌதமர்: அகலியே!

விசுவாமித்திரர்: ஆ!

லஷ்மணன்: அன்னையே!

ராமன்: தபஸ்வினி!

அகலியை: ராமா! உன் பாதங்கள் என்னைப் புனிதமாக்கி விட்டனவா?

ராமன்: அம்மா, நீ நிகரற்றவள்!

அகலியை: (கௌதமரை வணங்கி) மன்னிக்க வேண்டும்!

கௌதமர்: நான் உன்னை ஏற்க அருகனா?

சாபம் நீங்கப் பெற்ற அகல்யைக்கும் கௌதமருக்கும் விசுவாமித்திரர் ஆசி வழங்கினார்.

**நிகும்பிலை**

**(இந்திரஜித்தின்** மாளிகையில் ஓர் அறை. அதன் சாளரங்கள் தூரத்தில் தென்பட்ட யுத்தரங்கத்தை நோக்கி இருக்கின்றன. சுவர்களில் அவனுடைய பல வெற்றிகளைச் சித்தரிக்கும் ஓவியங்கள் காணப்படுகின்றன.

**நி**கும்பிலை யாகத்தில் பாதி கிளம்பிய ரதம் மறுபடியும் பூமிக்குள் மறைந்ததால் இந்திரஜித் காரியசித்தி யாகாதவனாய்ச் சோர்வுடன் மாளிகைக்குத் திரும்புகிறான். உடைவாளையும் தன் மேல் இருந்த மற்ற போர் அணிகளையும் களைந்து ஓர் புறம் எறிந்துவிட்டு அலங்கோலமாக மஞ்சத்தில் சாய்ந்து செய்கையற்றுப் போகிறான்.

**அ**திகாலை: கணவன் யாகத்திலிருந்து திரும்பி நிகும்பிலை வெற்றியுடன் வரும்பொழுது அவனுடைய அறையிலிருந்து கொண்டு வரவேற்க வேண்டும் என்று சுலோசனா அங்கே வருகிறாள்.

சுலோசனா: (ஆச்சரியத்துடன்) இதென்ன? இங்கே எப்பொழுது வந்தீர்கள்? இதென்ன அலங்கோலம்? யாகம் அதற்குள் முடிந்துவிட்டதா?

இந்திரஜித்: (உணர்ச்சியற்று தலை நிமிர்த்தி) கலைந்துவிட்டது! சுலோசனா: கலைந்துவிட்டதா? ரதம்...

இந்திரஜித்: பாதி கிளம்பியது மறுபடியும் உள்ளே போய் விட்டது.

சுலோசனா: நான்தான் சொன்னேனே, அப்பொழுதே! அந்த ரதம் எதற்கு உங்களுக்கு?

இந்திரஜித்: யுத்தரங்கத்தில் நான் தனித்து நின்ற காலம் போய்விட்டது. சுலோசனா: போகவும் இல்லை, ஒன்றுமில்லை. சரி, ரதம் வரவில்லை என்றால் இங்கு ஏன் இருக்கிறீர்கள்? வெற்றியடைந்து விட்டது போல இங்கே மஞ்சத்தில் சாய்ந்து கொண்டிருக்கிறீர்களே1 போர் முனைக்குப் போக வேண்டாமோ-?

இந்திரஜித்: (சலிப்புடன் அவள் முகத்தைப் பார்த்து) போர் முனைக்கா? இனிமேல் அங்கே எனக்கு என்ன வேலை? சுலோனா: என்ன வேலையா! எதற்காக இந்தச் சலிப்பு? உங்களுடைய வீரியத்திற்கேற்ற வேலை அங்கே இல்லை என்றா? லட்சுமணன்.

இந்திரஜித்: லட்சுமணன் இருக்கிறான்!

சுலோனா: பின் என்ன?

இந்திரஜித்: நிகும்பிலை தலையெடுத்து, மறைந்த ரதத்தைப் போல தலை தூக்கிய என் லட்சியங்களும் மழுங்கி மறைந்துவிட்டன. நிகும்பிலை முயற்சியும் அதன் தோல்வியும் என்னுடைய வீழ்ச்சியின் சூசகங்கள் நிகும்பிலை என் மனோரதம் மண்ணாய்ப் போய்விட்டது! வெற்றி ஏடுகள் கொண்ட என் வீர சரிதை இன்றுடன் முடிவடைந்து விட்டது? அவ்வளவுதான் இனிமேல் நான் போர்க்களத்திற்குப் போய் மடியவேண்டுமென்று அவசியமே இல்லை!

சுலோசனா: நிகும்பிலையில் என்ன அவ்வளவு நம்பிக்கை உங்களுக்கு? அதுபோனால் என்ன பிரமாதம்? அந்த மாயத் தேராலா இந்திரஜித்திற்கு ஜயம் வரவேண்டும்? அதோ, அந்த சித்திரத்தை பாருங்கள்! இந்திரனை வென்ற பொழுது எந்த நிகும்பிலையின் உதவி இருந்தது உங்களுக்கு?

இந்திரஜித்: (புன்னகையுடன்) இந்திரனா! அவன் கேவலம் தேவதை! அவனை வென்றதால் எனக்கு ஒன்றும் சந்தோஷம் கிடையாது.

சுலோசனா: இந்த லட்சமணன் மட்டும்?

இந்திரஜித்: என் தோள் வலிமையைச் சோதனைக் குள்ளாக்க வந்த சுத்த வீரன்!

சுலோசனா: அப்படியானால் அவனை வெல்வதில் உங்களடைய கீர்த்தி இரட்டிக்குமல்லவா? நல்லதுதானே!

இந்திரஜித்: (சட்டென்று) வென்றால்தானே?

சுலோசனா: நினைவுடனா நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள்?

இந்திரஜித்: சத்துருவினுடைய நினைவு அதிகமாக இருப்பதால்தான் இப்படிப் பேசுகிறேன்!

சுலோசனா: (கலங்கி) என் இப்படி என்றுமில்லாத சோர்வு? ஏன் இன்று உங்களுடைய புஜபலத்தில் இவ்வளவு அவநம்பிக்கை திடீரென்று?

இந்திரஜித்: என் புஜபலத்திற்குச் சரியான எதிரி இதுவரை வரவில்லை. இன்று வந்துவிட்டான்!

சுலோனா: சிறுவனான லட்சுமணனா அப்பேர்ப்பட்ட எதிரி என்கிறீர்கள்?

இந்திரஜித்: ஆமாம்! சத்தியமும் தர்மமும் அவனுக்கு வில்லும் அம்புமாக இருக்கின்றன. நிகும்பிலை என்ற மாயவேலை ஒன்றால்தான் நான் அவனைத் திணறடிக்க முடியும். அரைமனதுடன் தான் நான் அதைக்

கைக்கொள்ள முனைந்தேன்.

சுலோசனா: உங்கள் வீரியத்திற்கு அது அழகில்லை என்றுதான் நான் தடுத்தேன்!

இந்திரஜித்: சிற்றப்பன் என்ற துரோகியால் அதுவும் பயனற்றுப் போயிற்று.

சுலோசனா: நல்ல வேலைதான்! அவர் செய்தது நன்மைதான்!

இந்திரஜித்: இனிமேல் என் வாளுக்கும் அஸ்திரங்களுக்கும் வேலை இல்லை கீழே போட்டுவிட்டேன், பார்!

சுலோனா: என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? நேர்மையில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா இப்பொழுது? நிகும்பிலை என்ற சூழ்ச்சியால் தானா நீங்கள் வெற்றி பெற நினைத்தீர்கள்?

இந்திரஜித்: எது நேர்மை சுலோசனா? சுலோசனா: யுத்தம் தான்!

இந்திரஜித்: யுத்த முறையை நீ சொல்லுகிறாய்! யுத்தத்தின் லட்சியத்திலேயே நேர்மை இருக்க வேண்டும்

சுலோசனா: எது நேர்மை என்று யார் நிர்ணயிப்பது?

இந்திரஜித்: மனச்சாட்சி ஒன்றுதான், சுலோசனா!

சுலோசனா: யுத்த முறையில் நேர்மை இருந்தால் போதும். லட்சியத்தின் பலத்தை யுத்தம் நிர்ணயம் செய்துவிடும்.

இந்திரஜித்: முறையிலும் கூட, சுலோசனா, நேர்மை நேர்மையை ஒருக்காலும் எதிர்க்க முடியாது. அது இயற்கைக்கே விரோதம், நேர்மைக்கு எதிரியாக சூழ்ச்சிதான் நிற்க வேண்டும். அப்பொழுது தான் ஒரு வேளை வெற்றி உண்டு.

சுலோசனா: யுத்தத்தில் நேர்மை முறையில் போராடுவது தான் சுத்த வீரன் கடமை என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்திரஜித்: உறுதி வேண்டாமா?

சுலோசனா: உங்கள் வாள் இருக்கிறதே?

இந்திரஜித்: நடுவில் நிச்சயம் முனை மழுங்கிப் போகும். ஆகையால் உன் மாமனாரிடம் சென்று நான் சொன்னதாகச் சொல். அவருக்கு உயிர் வாழ இஷ்டமிருந்தால் சீதையை ராமனிடம் திரும்பி அனுப்பச் சொல், உடனே!

சுலோசனா: (துடிப்புடன்)சீதை ராமனிடம் திருப்பிப் போகிறாளா இல்லையா? என்பதைப் பற்றி எனக்குக் கவலை கிடையாது! நீங்கள் யுத்தரங்கத்திற்குப் போவதைப் பற்றித்தான் என் கவலை.

இந்திரஜித்: (கவனிக்காமல்) உன் மாமனாரின் இஷ்டம் பூர்த்தி ஆகாது! சுலோசனா: அதைப் பற்றியும் எனக்குக் கவலை கிடையாது!

இந்திரஜித்: பின் எதற்காக இந்த யுத்தம்?

சுலோசனா: நீங்கள் நிகரற்று விளங்குவதற்காகத்தான்.

இந்திரஜித்: (பலவீனமாக) சுலோசனா, ஏன் வீண் கனவு காண்கிறாய்?

சுலோசனா: (தீர்மானத்துடன்) நான் கனவே காணவில்லை. இந்தக் கணம் நடக்க வேண்டியதைத்ன் சொல்லுகிறேன்.

இந்திரஜித்: என்ன நடக்க வேண்டும் என்கிறாய்?

சுலோசனா: நீங்கள் உடனே போர்களத்திற்குப் போக வேண்டும்!

இந்திரஜித்: போய் செய்கிறது என்ன இருக்கிறது?

சுலோசனா: நாயகனில்லாமல் சேனை தவிக்கிறது.

இந்திரஜித்: தவிர்க்க வேண்டியது தான்!

சுலோசனா: அதோ பாருங்க-சாளரத்தின் வழியாக வானரர்களும் நம்மவர்களும் கைகலக்கிறார்கள். அவர்களுடைய கூச்சல் வானைப் பிளப்பது போல் இருக்கிறதே!

இந்திரஜித்: இருக்கும்!

சுலோசனா: (கொஞ்சம் மனஸ்தாபத்துடன்) உங்கள் காதில் விழவில்லையா?

இந்திரஜித்: இனிமேல் என் காதில் ஒன்றும் ஏறாது.

சுலோசனா: (மற்றொரு யுக்தியைக் கையாண்டு) உங்கள் காரியத்தையே நீங்கள் மறந்துவிட்டீர்கள். இதென்ன பழைய ஞாபகமிருக்கிறதா?- இந்திரனுடைய வஜ்ராயுதம் மழுங்கின இடம்!

இந்திரஜித்: லட்சுமணனுடைய சக்திதான் என்மேல் வஜ்ராயுதம் போல வந்து இறங்கப் போகிறது!

சுலோசனா: (சிரிக்க முயன்று) நீங்கள் சொல்வது அழகாகத் தான் இருக்கிறது. அதைத் தகர்த்தெறிய உங்கள் வாள் இல்லையோ?

இந்திரஜித்: வாளிருந்து என்ன செய்கிறது? அதில் வேகமில்லை.

சுலோசனா: (களைப்புற்று கடைசியாக)இலங்கையை எதிரிகளிடம் ஒப்புவித்து விடுவதா, அப்படித்தான் சொல்லுங்கள்!

இந்திரஜித்: அதில் என்ன இருக்கிறது-உயிரை கொடுத்துக் காப்பாற்றும்படியாக?

சுலோசனா: அதில் என்ன இருக்கிறதா! உங்கள் தகப்பனார்; தாயார்-நான்?

இந்திரஜித்: நீங்கள் எல்லோரும்-நீ கூடத்தானே சுலோசனா! என் இடிந்த மனக்கோட்டையின் கீழ் புதைந்து போய் விட்டீர்கள்!

சுலோனா: (தொட்டு எழுப்ப முயன்று) வாருங்கள், எழுந்திருங்கள், அதோ பாருங்கள்! யுத்தகளம் செவ்வானம் போர்ப் புழுதி பறந்து புறப்படுகிறது! இந்தச் சோர்வு உங்களுக்குக் கூடாது (கீழே கிடந்த வாளை எடுத்துக்கொடுத்து) இந்தாருங்கள் உடைவாள்! யாராவது பார்த்தால் கூட வெட்கக்கேடு. நல்ல வேளை, இங்கே யாரும் வரவில்லை.

இந்திரஜித்: (எழுந்து உட்கார்ந்து) வாளா! இதில் என்ன இருக்கிறது?

சுலோசனா: என் கற்பின் ஊக்கம் பூராவும் அதன் முனையில் இருக்கிறது. கீர்த்தி நிச்சயம்!

இந்திரஜித்: ஜயத்திலா, அபஜயத்திலா?

சுலோசனா: (வேகமாக) அதைப் பற்றி என்ன கவலை?

இந்திரஜித்: வாழ்விலா, சாவிலா?

சுலாசனா: (முழு உணர்ச்சியுடன்) அதுவும் கேள்வி இல்லை! இந்திரஜித்: (மெதுவாக) சுலோசனா, நான் இறந்து விட்டால் நீ என்ன ஆவது?

சுலோசனா: என்னைப்பற்றிய நினைவே எனக்கு இப்பொழுது கிடையாது!

இந்திரசித்: சுலேலாசனா, உன்னுடன் இங்கே

(மந்தோதரி வருகிறாள். சுலோசனை எழுந்து நிற்கிறாள்)

மந்தோதரி: மேகநாதா! இங்கே என்ன செய்கிறாய் மனைவியுடன்.

சுலோசனா: (சட்டென்று) போருக்கு ஆயத்தமாகிறார்!

மந்தோதரி: (ஏளனமாக) யாருடன்?

இந்திரஜித்: (சீறி எழுந்து) யாருடனா? யாருடன் வேண்டுமானாலும்!

மந்தோதரி: உன்னைப் பார்த்தாபோருக்குத் தயாராகிறவன் போல் தெரிவில்லையே!

இந்திரஜித்: என்ன சொல்லுகிறாய் நீ?

மந்தோதரி: சொல்லுகிறேன்! சரி, மனைவியுடன் பேசிக்கொண்டிரு! உன் தந்தையை முதலில் போர்க்களத்திற்கு அனுப்புகிறேன்.

(கோபத்துடன் வெளியே போகிறாள்)

இந்திரஜித்: (திடீரென்று ஆவேசத்துடன்) ஆ! கணநேரம் மனமிழந்து உட்கார்ந்ததின் பயன் அன்னையின் கோபம் அவள் சொல்லும்படியாகக் கூடவா நான் காரியத்தில் தாமதம் செய்துவிட்டேன்! அடடா?

(வெளியே போகக் கிளம்புகிறான்)

சுலோசனா: (திகிலடைந்து) இந்த அவமானத்துடன் நீங்கள் போகக் கூடாது; சற்று உட்காருங்கள்! இல்லாவிட்டால் நாளை போகலாம்!

இந்திரஜித்: அன்னை சொல்லிவிட்டாள், நிமிஷம் தங்க மாட்டேன்.

சுலோசனா: நான் சொல்லுகிறேன், நிமிஷம் தங்குங்கள்!

சுலோசனா: இப்பொழுது போக வேண்டாம் என்கிறேன்! இந்திரஜித்: ஏன், சுலோசனா?

சுலோசனா: உங்கள் நிலை இன்று சரியாக இல்லை. உங்கள் தாயாருக்குத் தெரியவில்லை. எனக்கு இப்பொழுது தெரிகிறது. நீங்கள் இன்று யுத்த களத்திற்குப் போவது சரியல்ல. பிரயோஜனமுமில்லை.

இந்திரஜித்: இவ்வளவு நேரம் என்னை மறந்து உட்கார்ந்து விட்டேன். நல்ல வேளை நீ என்னை எழுப்பிவிட்டாய்.

சுலோசனா: நானா, உங்கள் தாயாரா?

இந்திரஜித்: இருவரும்தான்!

சுலோசனா: இல்லை, உங்கள் தாயார்தான்! நான் எவ்வளவோ முறைகளில் உங்களை எழுப்ப முயன்றேன். முடியவில்லை. உங்களை எழுப்பும் சூக்ஷமம் உங்கள் தாயாருக்குத் தெரிந்திருக்கிறது-எனக்குத் தெரியவில்லை!

இந்திரஜித்: ஒன்றுமில்லை, சரி, சுலோசனா, போகட்டுமா?

சுலோசனா: (கண்ணீருடன்) என்னை ஏன் கேட்கிறீர்கள்?

இந்திரஜித்: பின் யாரைக் கேட்பது?

சுலோசனா: நான் ல்வதைக் கேட்பததென்றல் நீங்கள் இன்று போக வேண்டாம்!

இந்திரஜித்: நீதான் இப்பொழுது என்னுடைய வலிமையில் சந்தேகம் கொள்ளுகிறாய்-நீதான் என் கீர்த்திக்குத் தடையாக நிற்கிறாய் இப்பொழுது. சுயநலலெண்ணம் கொண்டு என்னை உன்னிடமே பேடியாக-

சுலோசனா: (சட்டென்று) சரி, போங்கள்!

இந்திரஜித்: போகட்டுமா?

சுலோசனா: (திடீரென்று கலங்கி கணவன் கால்களைப் பற்றிக் கொண்டு) போகிறீர்களா?

இந்திரஜித்: போய் வருகிறேன், சுலோசனா!

சுலோசனா: நீங்கள் என் மனதை விட்டுப் போக முடியாது! ஆனால்....

இந்திரஜித்: வருகிறேன், சுலோசனா! உயிர் போனாலும்உடல் வரும்!

(போகிறான், சுலோசனா மெய்ம்மறந்து நிற்கிறான்)

## பெண் இருதயம்

**(மகாகவி** காளிதாசன் சாகுந்தலத்தில் லேசாகக் குறித்துவிட்டு விட்ட ஒரு சந்தர்ப்பம் இது துஷ்யந்தனால் திரஸ்காரம் செய்யப்பட்ட சகுந்தலை. அவனுடையசபையில் நின்று கொண்டு இன்னது செய்வதென்று தெரியாமல் தவிக்கிறாள்.

அப்பொழுது மேனகை தேவலோகத்திலிருந்து இறங்கி வந்து சகுந்தலையைத் தூக்கிக்கொண்டு போவதாகக் கவி சொல்லுகிறார். ஆனால் மேனகையுடன் சகுந்தலை இந்திரலோகத்திற்குப் போகவில்லை. அந்தரத்தில் காசியபர் ஆசிரமத்திலேயே தங்கிவிடுகிறாள் நடுவழியில் சகுந்தலைக்கு மூர்ச்சை தெளிகிறது)

சகுந்தலை: (பிரக்ஞை பெற்று): சகி, அனசூயா!... இல்லையே! நான் எங்கிருக்கிறேன்?

மேனகை: (அவளைச் சற்று இறுகப் பிடித்துக்கொண்டு) சகுந்தலா, கடைசியாக உன் அன்னையின் மார்பில்!

சகுந்தலை: (தலையெடுத்துப் பார்த்து): அன்னையா எனக்கேது அன்னை?

மேனகை: உனக்கும் ஓர் அன்னை உண்டு: அந்தப்பாவி நான்தான்!

சகுந்தலை: (காதில் போட்டுக்கொள்ளாமல்) எனக்கு அன்னையும் பிதாவும் அந்தக் குலபதி கண்வ மகரிஷிதான். நீங்கள்... யாரம்மா? என்னை எங்கே எடுத்துக்கொண்டு போகிறீர்கள்?

மேனகை: வாஸ்தவமாக கண்ணே, நான் தான் உன்னைப் பெற்றேடுத்த பேதை! ஆ.... நீ என் வார்த்தைகளை நம்பவில்லை! உன்னைத் தழுவியிருக்கும் அங்கங்கள் அத்தாட்சி கூறவில்லையா?

சகுந்தலை: நீங்கள் யார்?

மேனகை: நான் உன் தாயார் மேனகை, சகுந்தலா

சகுந்தலை: அப்சரசுகளில் முதன்மையானவள்?

மேனகை: ஆமாம். அந்தப் பாதகி நான்தான்! உன்னை உனக்குகந்த ஸ்தானத்திற்கு எடுத்துக்கொண்டு போகிறேன் இப்பொழுது!

சகுந்தலை: எனக்குகந்த ஸதரனமா? அது எது? துஷ்யந்த மகாராஜன் ஆக்ஞாபித்த சிறையா?

மேனகை: இல்லை. சுவர்க்கத்தில், உன் தாயாரின் அருகில் வாழையின் அடியில் அதன் கன்றுபோல!

சகுந்தலை: சுவர்க்கத்திலா? சுவர்க்கத்திலிருந்து தான் என் நாதன் என்னை ஒரே அடியாகக் கீழே தள்ளி விட்டாரே! இனிமேல் நான் அங்கே எப்படிப் போக முடியும்? முடியாது!.. துஷ்யந்தராஜன் ஒரு வேளை பச்சாத்தாபம் கொண்டு மறுபடியும் கையைப் பிடிப்பாரென்றா? நான் நினைக்கவில்லை.

மேனகை: துஷ்யந்தன் கிடக்கிறான்! அவன் கேவலம் பூலோகத்து அரசன். நான் உன்னை, என் மகள் என்ற கௌரவத்தால், தேவராஜன் முன், என் பக்கத்தில் அமர்த்திக்கொள்கிறேன்!

சகுந்தலை: (விளங்காமல்) எதற்காக?

மேனகை: எதற்காகவா? அமராவதியில், என்றும் மங்காத லாவண்யத்துடன், துக்கக் கலப்பே இல்லாத, நித்திய யௌவன சுகத்தை அனுபவிக்கத்தான்!

சகுந்தலை: ஓ!

மேனகை: என்னை மன்னித்துவிடு சகுந்தலா! இன்னும் சில வருஷங்களுக்கு முன்னேயே நான் உன்னை அழைத்துக்கொண்டு போயிருக்க வேண்டும். தவறி விட்டேன்!

சகுந்தலை: நீங்கள் யாராயிருந்தாலும் சொல்கிறேன் கேளுங்கள். பாவம், ஏன் வீணாக ஆயாசப்படுகிறீர்கள்?

மேனகை: உன்னை சுவர்க்கம் கொண்டு செல்லுவதில் எனக்கென்ன ஆயாசம்!

சகுந்தலை: சுவர்க்கம்! சுவர்க்கம் என்று எதைச் சொல்கிறீர்கள்? துஷ்யந்தன் கைவிட்ட பிறகு எனக்கு சுவர்க்கமேது? சுகமேது?

மேனகை: அவன் தான்உன்னை தள்ளி விட்டானே?

சகுந்தலை: அவர் ஏதோ தயையற்று என்னைத் தள்ளிவிட்டால்? என் இருதயத்தைவிட்டு நான் அவரை எப்படி அகற்ற முடியும்?

மேனகை: அசடுதான் நீ.

சகுந்தலை: எனக்கு நித்தியமாகிவிட்ட அந்த இளவேனில் இரவை நான் மறக்க முடியுமா?

மேனகை: இந்திர லோகத்தில் அது மறைந்து போகும்!

சகுந்தலை: அந்தப் புனிதமான ஆசிரமத்தின் சாந்தத்தில், சுருதியில் ஸ்வரம்போல லயித்துச் சகிகளுடன் பிரகிருதியின் ஒரு பகுதிபோலக் காலங்கழித்தேன்.

மேனகை: அது கிடக்கிறது, சகுந்தலா, மற்றொரு மகத்தான ஜீவனம் உனக்குக் காத்துக் கொண்டிருக்கிறது.

சகுந்தலை: என்னைச் சீரழிக்க அந்த ஆசிரமத்துக்கு எங்கிருந்து வந்து சேர்ந்தீர்கள்? வேத மந்திரங்களையும் இயற்கையின் கானத்தையும் தான் நான் அறிந்திருந்தேன். ஏன் என் செவிகளில் ஒரு புது ஒலியின் பேரிசையைக் கொண்டு வந்து கொட்டினீர்கள்?

மேனகை: மனிதர்களே அப்படித்தான் சகுந்தலா! நான் கூட....

சகுந்தலை: துஷ்யந்தா! அன்று ஆசிரமத்தில் செய்த அவ்வளவு செய்கைகளிலும், சொல்லிய அவ்வளவு சொற்களிலும் ஒன்று கூடவா உங்கள் நினைவில் இல்லை?

மேனகை: மனிதர்களின் ஆயுள் போல அவர்கள் நினைவும் நீடிக்காது.

சகுந்தலை: தேனைக் குடிக்கும் தேனீக்கள் போல என் முகத்தை மொய்த்த உங்கள் கண்கள் கூடவா என்னை மறந்திருக்கும்? வேண்டுமென்றே என்னை நிராகரித்து விட்டீர்களா?

மேனகை: ஆமாம், சகுந்தலா, சந்தேகமில்லை!

சகுந்தலை: பின்னையேன் பேதையாகத் திரிந்த எனக்கு இந்த உணர்ச்சியை ஊட்டினீர்கள்? பிறகு உதறித் தள்ளுகிறீர்கள்? ஐயோ, என் உயிர்கூடப் போகவில்லையே?

மேனகை: சகுந்தலா

சகுந்தலை: அன்று வனத்திற்கு ஒரு மானைஅடிக்க வந்தீர்களோ அல்லது ஒரு பெண்ணின் புல்லிய இருதயத்தைப் பிளக்க வந்தீர்களோ?

மேனகை: ஆமாம், ஆமாம்!

சகுந்தலை: நான் உங்களுக்கு இப்பொழுது தேவை இல்லையோ? என்னை நினைவுக்குக் கொண்டு வர வேண்டிய அவசியம் இல்லை! மதுபானம் செய்த பிறகு பாத்திரத்தை விட்டெறிவது போல என்னை எறிந்துவிட்டீர்கள். அப்பப்பா! என்ன பிரதிக்ஞைகள்! எவ்வளவு அடையாளங்கள்! என்ன சோதனை? மோதிரம் கூட எங்கே தவறிப்போய்விட்டது?... அம்மா, அந்த அரசன்தான் உங்களை ஏவி என்னை எங்கேயாவது எடுத்துக்கொண்டு போகச் சொன்னாரோ? தன் அவமானத்திற்குக் காரணமாக நான் இல்லாமல் செய்ய.

மேனகை: இல்லை, இல்லை, சகுந்தலா! நான் தான்

சகுந்தலை: நீங்கள் சிரமப்பட வேண்டாம். என் உயிர் தானே போய்விடும். உடல் இனிமேல் அழிந்துவிடும்.

மேனகை: கண்மணி, உறுதியாகச் சொல்லுகிறேன். நான் உன் தாயார்! என் பெயர் மேனகை. வெட்கம் விட்டுச் சொல்லுகிறேன். என் சாகசத்தால் நான் விசுவாமித்திரரின் தவத்தை அழித்தபொழுது நீ பிறந்தாய்-பூமியின் சம்பந்தத்தால் விதை முளைப்பது போல! தேவதாகர்வத்தால் அப்பொழுது நான் உன்னைப் பூலோகத்திலேயே விட்டுவிட்டுப் போய்விட்டேன்.

சகுந்தலை: ஆ, நினைவு வருகிறது. மத்தியான வேளைகளில் நான் கணவருக்குக் கால்பிடித்துக்கொண்டிருக்கும் பொழுது நான் கண்டெடுக்கப்பட்ட கதையைக் கூறுவார்.

மேனகை: அதென்னத்திற்கு இப்போது?

சகுந்தலை: நீங்கள் குழந்தையை இலைகளின் மேல் எறிந்துவிட்டுச் சென்றதும், சகுந்த பக்ஷிகள் என்னைச் சுற்றிப் பறந்து காத்தனவாம்.

மேனகை: வேண்டாம் அந்தக் கதை!

சகுந்தலை: காலம் பிறைசந்திரனை வளர்ப்பது போல கண்வர் என்னை வளர்த்தார். இந்தப் பாவி அரசன் எனக்கு ராகுவாக–

மேனகை: இனிமேல் பீடை இல்லை. சுவர்க்கத்தை நெருங்கி விட்டோம்.

சகுந்தலை: இங்கே என்ன வேலை எனக்கு?

மேனகை: அதோ பார், பகவான் காசியபருடைய ஆசிரமம். அவத்தான் மேரு சிகரங்கள். இதோ பார்த்தாயா? கந்தர்வ, கின்னர ஸ்திரீகள் என்னை அசூயையுடன் பார்க்கிறார்கள். மேலும் அப்பால் பார்!

சகுந்தலை: என் பார்வை எதில் சென்று என்ன ஆக வேண்டும்? எனக்கு ஒன்றும் பார்க்கவேண்டியதாயில்லை.

மேனகை: அமராவதியின் மாளிகை; சிகரங்களைக் கொஞ்சம் பாரேன்! நட்சத்திரங்கள்தான் அவற்றின் ஜோதி

விளக்குகள். அதென்ன சத்தம் தெரியுமா?

சகுந்தலை: எனக்கொன்றும் கேட்கவில்லை.

மேனகை: ஹாஜார வாசலின் நாதம்-ஏன் கண்மணி என்ன, அப்படி என்னைப் பார்க்கிறாய்?

சகுந்தலை: என் தாய் என்கிறீர்களே, உங்கள் முகத்தை பார்க்கிறேன். நல்ல வேளை துஷ்யந்தன் மட்டும் துராத்மா இல்லை. அவருக்கு முன்கூட-கருணை என்பது கொஞ்சமும் இல்லாத உள்ளங்கள் இருந்திருக்கின்றன.

மேனகை: (நடுங்கி) சகுந்தலா–

சகுந்தலை: (கோபத்துடன்) சகுந்தலா! நீங்கள் வைத்த பேரோ? சொல்லவும் நாவெழுகிறதே!

மேனகை: நீ–

சகுந்தலை: அக்கிரமமாக ஒரு முனி சிரேஷ்டரை-அவர் தவத்தைக் கெடுத்து, என்னைப் பெற்று நான் படும் இந்தப் பாட்டிற்கு மூலகாரணமாகி....

மேனகை: சகுந்தலா, அதெல்லாம்தான் தெரியாத தனத்தால் செய்த காரியம என்றேனே.

சகுந்தலை: (காதில் போட்டுக்கொள்ளாமல்) பெற்ற பொறுப்பை ஏற்கத் தைரியமில்லாமல், தயை என்பது கொஞ்மும் மின்றி, பிறந்த பேதயைப் பதறவிட்டுச் சென்ற நீங்கள்...

மேனகை: ஆயிற்றா, இன்னும் இருக்கிறதா?

சகுந்தலை: வெட்கமில்லாமல், ஸ்தரீயென்றும், என் தாய் என்றும் சொல்லிக்கொண்டு என்னைத் தொடுகிறீர்கள்! முள்ளைக் கட்டிக்கொண்டிருப்பது போல இருக்கிறது எனக்கு. தேவதைகளுக்கு இருதயமே கிடையாதோ?... துஷ்யந்தன் உங்களைக் காட்டிலுமா கெட்டுப்போய்விட்டார்? இல்லை, இல்லை!

மேனகை: (அழுதுகொண்டு) அம்மா, போதும் உன் பார்வைகளாலும் சொற்களாலும் என்னை; சல்லடைக் கண்களாக்கத் துளைத்துவிட்டாய்! எனக்கு நன்றாக வேண்டும்தான். ஆனால இனிமேல் என்னால் தாங்க முடியாது.

சகுந்தலை: ஏன் தாங்கமுடியாது? தாங்காமலா இத்தனை வருஷங்கள் என் நினைப்பே இன்றி இருந்தீர்கள்?

மேனகை: உன் அருமையை நான் இதுவரையில் அறிய வில்லையடி, கண்ணே! இப்பொழுது அறிகிறேன். என் பெற்ற மனம் பதைக்கிறது.

சகுந்தலை: எதற்காகவோ?

மேனகை:நான் இன்னதென்று அறியாத ஒரு பிணி, இத்தனைவருஷங்களாக என்னை வாட்டிற்று. இன்று அகன்றுவிட்டது.

(ஊர்வசி வருகிறாள்)

ஊர்வசி: மேனாக, இது யார் இந்த மனிதப் பெண்?

மேனகை: (கர்வமாக) என் பெண்!

ஊர்வசி: (ஆச்சரியத்துடன்) ஏன் பெண்ணா? அதென்ன? பூலோகத்திலா? இதுவரையிலும் தெரியாதே யாருக்கும்!

மேனகை: இதில் என்ன ஆச்சரியம்? நீ பூமிக்குப் பேய் பிறவி எடுக்கவில்லையோ?

ஊர்வசி: அது எல்லோரும் அறிந்த விஷயமாயிற்றே. இது யாருக்கும் தெரியாதே! ஆமாம்....

மேனகை: இவள் சகுந்தலை. விசுவாமித்திரரிடம் எனக்குப் பிறந்தவள்.

ஊர்வசி: இதுவரையில் எங்கே வைத்திருந்தாய்.... இரகசியமாக?

மேனகை: (கோபத்துடன்): நீ உன் பிள்ளை ஆயுஸ்சை தபோவனத்தில் வைத்து, இரகசியமாகப் பெற்றவனுக்குக் கூடத் தெரியாமல்–

ஊர்வசி: சரிதானடி, நான் உன்னைப்போல்...

சகுந்தலை: அம்மா, நீங்களும் குழந்தை பிறந்ததும் பூலோகத்தில் விட்டெறிந்து விட்டுத்தான் போனீர்களோ!

ஊர்வசி: ஆனால் மேனகா, நீ.....

மேனகை: கணவருடைய ஆசிரமத்தில் விட்டுவிட்டுப் போனேன்!

ஊர்வசி: அங்கிருந்து இப்பொழுது எங்கே கொண்டு போகிறாய்? மேனகை: ஸ்வர்க்கத்திற்குத்தான்!

ஊர்வசி: இந்த அழகிய, உயிர் நிறைந்த பெண்ணையா?

மேனகை: ஏன்?

ஊர்வசி: ஏனா? அவளையும் ஏன் நம்மைப்போல மாறுதலற்ற சுகம் களைப்புக்கு உள்ளாக்கப் பாக்கிறாய்?

மேனகை: (கோபமாக) சரிதான், நீ போ, உனக்கென்ன?

ஊர்வசி: எனக்கொன்றுமில்லை. அன்று இந்திரன் அகலியையைக் கெடுத்தார். நீ இன்று மற்றோர் மண்ணுலகத்து மாதை அழிக்கிறாய்!

மேனகை: அழிக்கிறேனா, நன்றாயிருக்கிறதே நீ சொல்வது! துஷ்யந்தன் அவளை அழித்தான். நான் அவளுக்கு நம்மிடையே புனர்ஜன்மம் அளிக்கப் போகிறேன்!

ஊர்வசி: ஆ! துஷ்யந்தன் காதலியா இவள்?

சகுந்தலை: ஏனம்மா?

ஊர்வசி: கண்மணி, நீ கொடுத்து வைத்தவள்.

மேனகை: (கோபமாக) ஊர்வசி, நீ போ, அவள் மனதைக் கலைக்கவா இங்கே வந்தாய்?

ஊர்வசி: எனக்கென்ன, நான் போகிறேன்.

(போகிறாள்)

மேனகை: சகுந்தலா, இதோ பார்! காசியபர் ஆசிரமமத்திற்கு வந்து விட்டோம்! இங்கு சற்று தங்கி அவரைத் தரிசித்துவிட்டு க்ஷணத்தில் சுவர்க்கம் செல்வோம்.

சகுந்தளலை: ஆ, இப்பொழுது தெரிகிறது! கேவலம் கணிகையாகிய உங்களுக்குப் பிறந்தவள் என்ற காரணத்தால் தான் துஷ்யந்தன் என்னை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அவர் சந்திர வம்சத்தின் நடுநாயகம். நான் ஒரு தேவதாசியின் பெண் தானே!

மேனகை: துஷ்யந்தன் கிடக்கிறான். உயர்ந்த ரத்தினத்தின் அருமையை அறியாத மூடன், உன் காந்தியால் இந்திர சபையை விளக்கு. சந்திர மண்டலம் கையில் இருக்கும்போது விளக்கை ஏன் வேண்டுகிறாய்?

சகுந்தலை: அம்மா, அது உங்கள் தொழில். நான் துஷ்யந்த மகாராஜனின் பத்தினி. காந்தர்வ முறையில் அவர் கைபிடித்தவள். கேவலம் பூலோக தர்மத்தில் ஈடுபட்டவள் நான்.

மேனகை: என் மகள் நீ. தேவ சுகம் பெற வேண்டியவள்.

சகுந்தலை: தேவ சுகம் எனக்கு வேண்டாம்.

மேனகை: (கொஞ்சம் கடுமையாக) பைத்தியமோ! நான் உன்னை இப்பொழுது கைவிட்டுவிட்டால், உன் கதி என்னவாகும்?

சகுந்தலை: நீங்கள் என்னைப் பெற்றவுடனேயே கைவிட்டீர்களே, அப்பொழுது என்னவாயிற்று? அதுபோல ஆகிறது!

மேனகை: மறுபடியும் அப்படி ஆகக்கூடாது!

சகுந்தலை: என் சம்பந்தமே கூடாது என்று அதை அறுத்துவிட்டு, விட்டுப்போன உங்களுக்கு, இப்பொழுது இவ்வளவு கவலை அனாவசியம்.

மேனகை: (கோபமாக) அடியே, நீ என் குழந்தை என்ற காரணத்தாலும், என்மேல் குற்றமிருக்கிறது என்ற காரணத்தாலும் நீ சொன்னதையெல்லாம் இது வரையில் பொறுத்துக்கொண்டிருந்தேன்.

சகுந்தலை: நான் சொல்லவில்லையே நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று!

மேனகை: ஆதியில், நீ பிறந்த காலத்தில், நான் செய்த குற்றத்திற்கு ஈடுசெய்துவிட்டேன். இப்பொழுது உன்னை அங்கீகரிக்கத் தயாராய் இருக்கிறேன்!

சகுந்தலை: நீங்கள் அங்கீகரித்து என்ன ஆக வேண்டும்?

மேனகை: வாயை மூடிக்கொண்டு என்னுடன் கூட வந்தால் சுகம்-இல்லாவிட்டால் மறுபடியும் வீழ்ச்சிதான்.

சகுந்தலை: (ஏளனமாகச் சிரித்து) அம்மா, என்னைப் பயமுறுத்தாதீர்கள். நான் விழுவதற்கு தாழ்வான இடம் இனி இல்லையே!

மேனகை: உம்!

சகுந்தலை: உங்கள் கோபமும் பிரியமும் வீண்.

மேனகை: (ஆச்சரியத்துடன்) என்ன?

சகுந்தலை: ஆமாம்! என்னை உதைத்துத் தள்ளிய துஷ்யந்தன் பாதம் எனக்கு மேல்-உங்கள் கூடவந்து இருக்கும் சுகம் மேலன்று.

மேனகை: (ஏளனமாக) அவன் பாதத்தருகே என்னை இருக்கவிட்டாலல்லவா?

சகுந்தலை: அரசன் ஏதோவொரு பிரமையாலோ அல்லது சுரத்தாலோ இப்படி என்னைக் கைவிட்டாரே தவிர, மனத்துடன் என்னை அவர் நிராகரிக்கவே மாட்டார் என்று என் மனம் சொல்லுகிறது. அந்த அந்தக் கரணத்தின் சொல் எனக்குச் சத்தியம்.

மேனகை: ஆகையால்?

சகுந்தலை: ஆகையால், நான் மறுபடியும் அவர் பாதத்தை நிச்சயம் அடைவேன்.

மேனகை: (பரிதாபமாக) சகுந்தலா, உனக்கு சொர்க்கத்தின் நித்திய சுகம் வேண்டாமா?

சகுந்தலை: வேண்டாம்.

மேனகை: பெற்றெடுத்தவளிடம் பிரியம் வேண்டாமா?

சகுந்தலை: அது எனக்கு இப்பொழுது தேவைஇல்லை.

மேனகை: (கோபத்துடன்) நான் இப்பொழுது உன்னைஅந்தரத்தில் விட்டுவிட்டுப் போய்விடட்டுமா?

சகுந்தலை: தாராளமாக! அன்று அந்த ஆகாத இரவின் இறுதியில் எப்படி என்னைத் தயக்கமின்றி விட்டுச்சென்றீர்களோ, அப்படியே இன்றும் இந்த அந்தரத்தில் விட்டுச் செல்லுங்கள்.

**வீரத்தின் முன் காதல்**

(**பாரத** யுத்தத்தின் நடுவில் ஒரு நாள் அர்ச்சுனனின் குமாரன் அபிமன்யு போர் முனைக்குப் போக வேண்டிய தினத்தன்று அதிகாலை அருணோதயத்திற்கு முந்தின நேரம்

அரண்மனையின் படுக்கை அறை, அதில்கிழக்கு நோக்கியிருக்கும் சாளரத்தின் அருகே, கட்டிலில், அபிமன்யு உட்கார்ந்து கொண்டு சாளரத்தின் வழியாகத் தூரத்தில் மினுக்கு மினுக்கென்று தெரியும் போர்க்களத்துக் கூடார விளக்குகளைக் கவனித்துக்கொண்டிருக்கிறான். அவன் மனைவி உத்தரை பூமியில் மண்டியிட்டு உட்கார்ந்து அவன் கால்களைக் கட்டிக்கொண்டு முகத்தை மடியில் வைத்து மன்றாடிக் கொண்டிருக்கிறாள்.

இருவரும் இரவு வளர்ந்து கழிவதை அறியாமல் பேசினார்கள். அந்தப்பொழுதறியாது பேச்சின் இறுதியில் அருணோதயமாகிறது.

அபிமன்யு: (திடீரென்று மெய்ம்மறதியை உதறி) உத்தரா! விடிந்து விட்டதுபோல் இருக்கிறதே! அதோ பார்; கிழக்கு வெளுத்த இடத்தில அருணோதயம் ஆகாயத்தைப் போர்க்களம் போல ரத்தக் கிளறியாக்குகிறது இனிமேல் நான் இங்கே தாமதம் செய்யக்கூடாது. சூரியோதய வேளைக்குப் போர் முனையில் நான் என் ஸ்தானத்தில் ஆயுத பாணியாகத் தயாராக இருக்க வேண்டும்.

உத்தரை: (ஏக்கத்துடன்) போர் முனைக்குப் போகத்தான் வேண்டுமா?

அபிமன்யு: சந்தேகமென்ன?

உத்தரை: அப்படியானால் இனி, மறுதடவை, எங்கே, எப்பொழுது, எப்படி, சந்திக்கப் போகிறோமோ?

அபிமன்யு: ஏன், இங்கே இன்று மாலை, உன் மார்பிற்கு, அஸ்தகிரிக்குத் திரும்பி வரும் சூரியன் போலத் திரும்பி வருகிறேன், அதில் என்ன சந்தேகம் உனக்கு?

உத்தரை: உதயகிரியை விட்டுக் கிளம்பி விட்ட பிறகு

அபிமன்யு: உத்ரா, என் புஜபலத்தில் நீ ஏன் இவ்வளவு சந்தேகம் கொள்கிறாய்? நிச்சயமாக நான் வெற்றியுடன் வருவேன். அப்பொழுது நீ என்னை எதிர்கொண்டு வந்து உன் இரு கரங்களையும் கோர்த்து ஒரு வாடா மாலையாக்கி என் கழுத்தில் சாத்துவாய்!

உத்தரை: இப்பொழுது உங்கள் வெற்றியைப் பற்றி நான் யோசிக்கவில்லை. ஆனால், நாளைக்குப் போனால் என்ன போர் முனைக்கு?

அபிமன்யு: (உத்தரையின் முகத்தைத் தூக்கிப் பார்த்து) ஏன், ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?

உத்தரை: (கண்கலங்கி) வீரனுடைய பத்தினியாயிருந்தும் ஏனோ இன்று என் மனது சஞ்சலமடைகிறது. சந்தோஷமாய் உங்களைத் தூண்டி அனுப்பவேண்டியிருக்க, எனக்கு ஏனோ நெஞ்சில் துக்கம் அடைக்கிறது!

அபிமன்யு: அசட்டுத்தனம்! அதெல்லாம் என் பெண்மையின் பேதை மனத்தின் பயத்தைக் காட்டுகிறதே தவிர வேறொன்றுமில்லை. ஆ, அதோ பேரிகைகள் முழங்குகின்றன. என் உத்தாகத்தைக் கிளப்புகின்றன!.... நான் போக வேண்டும். எழுந்து, என்னை வழியனுப்பு?

உத்தரை: என் மனம் காரணமில்லாமல் பயமடையாது. ஆகையால் இன்று நீங்கள் யுத்தத்திற்குப் போகாமல் இருந்தால் நல்லத. நான் கெடுத்த கேடாய் இருக்கட்டும். என் பேச்சைக் கேட்கக் கூடாதா?

அபிமன்யு: இன்று போகாமல் நான் நாளைக்குப் போர் முனைக்குப் போய் வெற்றி பெற்றாலும் பிரயோஜனமில்லை. சூரியோதயத்திற்குப் பின் ஆகாயத்தில் தென்படும் சந்திரனைப் போல அந்த வெற்றி குன்றி சோபையற்று வரும்.

உத்தரை: ஏன்?

அபிமன்யு: இன்று யுத்தம் தான் என் வாளுக்கும், தோளுக்கும் ஏற்றது. இன்று தப்பினால் என் சௌரியத்தைக் குப்பையில் போட வேண்டியதுதான். அதற்கேற்ற யுத்தம் இனிமேல் கிடையாது!

உத்தரை: என் மனது சம்மதப்படவில்லை. அந்த வெற்றியால் ஏற்படும் புகழ், வேண்டாம். அதன் போதை வேண்டாமே!

அபிமன்யு: அதில்லாமல் நான் உயிர் வாழ முடியாது!

உத்தரை: அது எதற்கு? நான் இல்லையா? நான் பெரியவளா, அது பெரியதா?

அபிமன்யு: கோபித்துக்கொள்ளாதே, உத்தரா! இப்பொழுது நினைத்துப் பார்த்தால் கீர்த்திதான் பெரிதாகத்

தோன்றுகிறது வேண்டுமானால் கீர்த்தியும் நீயும் சக்களத்திகள் என்று வைத்துக்கொள்!

உத்தரை: (மனஸ்தாபத்துடன்) எனக்கு சக்களத்தி வேண்டாம்!

அபிமன்யு: (அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல்) அதோ, திரும்பவும் யுத்தரங்கத்திலிருந்து உணர்ச்சியெழுப்பும் சத்தம் கேட்கிறது, பார்!

உத்தரை: அது என் காதில் இப்பொழுது ஏறாது!

அபிமன்யு: அந்த இடமே ஈசற்புற்றைப்போல சுழப்படுவதைப் பார்!

உத்தரை: நான் பார்க்கவில்லை. எனக்கு வேண்டாம் அது!

அபிமன்யு: உன்னோடு வாதாட இப்பொழுது எனக்குச் சாவகாசம் இல்லை!

உத்தரை: (துடிப்புடன் தலை தூக்கி) நான் உங்களுக்கு லட்சயமில்லையென்றால் என்னை ஏன் மணந்து கொண்டீர்கள்?

(அபிமன்யு மௌனமாக வெளியே பார்த்துக்கொண்டிருக்கிறான்).

உங்களது யௌவன ஊக்கத்தைக்கொண்டு என் இருதய மொட்டை ஏன் மலரச்செய்தீர்கள்- அது அப்படியே சுருகிப் போய் இருக்குமே!

அபிமன்யு: (மெதுவாகப் பார்வையை அவள் மேல் திருப்பிப் புன்னகையுடன்) நான் குற்றவாளியன்று, உத்தரா! நீ தான்!

உத்தரை: எப்படி?

அபிமன்யு: நீதான், அம்பின் மேலேயே குறியாயிருந்து என் பார்வையை உன் பக்கம் சலிக்கும்படியாய்ச் செய்தாய், என்ன?

(உத்தரை மௌனமாக இருக்கிறாள்)

கண்ணைப் பறிக்கும் உன் கட்டழகை அதன் முன் ஒரு வலை போல வீசினாய். என் கண்கள் அதன் மாய முடிகளில் சிக்கிக் கொண்டன!

உத்தரை: உங்களுக்குக் கீர்த்தி பெரியதாயிருந்தால் அப்பொழுதே என்னைத் திரஸ்கரித்திருக்கலாமே, என்னை ஏகாசனத்தில் இருத்திய பிறகு, அதிலிருந்து கீழே தள்ளுவது நியாயமா?

அபிமன்யு: தள்ளவில்லை, உத்தரா! இன்னும் என் இருதயத்தில் நீ அதே இடத்தில்தான் வீற்றிருக்கிறாய்; சந்தேகமில்லை!

உத்தரை: பின் ஏன் என் பேச்சைக் கேட்கக் கூடாது?

அபிமன்யு: என்ன, உத்தரா, இப்படிப் பேசுகிறாய்? உன் பேச்சைக் கேட்டுக்கொண்டிருப்பதுமட்டும்தானா என் உயிரின் வேலை லட்சியம்? என் சௌரியம் என்ன ஆவது மறந்துவிட்டாயே!

உத்தரை: நான் என்ன ஆவது மறந்து விட்டீர்களே!

அபிமன்யு: உனக்காக என் க்ஷத்திரிய குல தர்மத்தையே கைவிட வேண்டுமென்கிறாயா? என் உத்தம குணங்களுக்கும் அது ஏற்குமா?

உத்தரை: என் குணங்கள் குட்டிச்சுவராய்ப் போகட்டும். அது இருந்து என்ன பயன்? அவற்றால் நான் உங்களை என்னிடம் பரிபூரணமாக ஈடுபடச் செய்ய முடியாவிட்டால்.

அபிமன்யு: ஈடுபட்டுத்தான் இருக்கிறேன், உத்தரா! ஆனால் என் அன்புமட்டும் என் உயிரை நிரப்பி விடுமா?

உத்தரை: ஏன் நிரப்பாது?

அபிமன்யு: என் பிறப்பு? என் தோள் வலிமை? அவை பயனற்றுப் பாழடைவதா?

உத்தரை: என்னை மணந்திருக்க வேண்டாமே அப்பொழுது!

அபிமன்யு: மணந்தால் இப்பொழுது என்ன கெட்டுப்போய்விட்டது. நான் வெற்றியுடன் திரும்பி வந்து களை தீர உன் அழகைப் பருகுகிறேன். எதற்கும் ஒரு காலம் இருக்கிறதல்லவா?

(அபிமன்யுவைக் கூப்பிட்டுக் கொண்டே சுபத்திரை நுழைகிறாள். உத்தரை எழுந்து அத்தைக்கு நமஸ்காரம் செய்கிறாள். அபிமன்யுவும் கட்டிலைவிட்டு எழுந்து தாயிடம் சென்று நிற்கிறான்)

சுபத்திரை: குழந்தாய்! உன் தகப்பனார் யுத்தகளத்திற்குப் போய்விட்டார். நீ இன்னும் போகவில்லையா?

உத்தரை: நான்தான் தாமதத்திற்குக் காரணம், நாளைப் போகலாம் என்று சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

சுபத்திரை: ஏனம்மா?

உத்தரை: அத்தை எனக்கென்னமோ இன்று மனது தட்டுகிறது.

சுபத்திரை: அபிமன்யு, உத்தரை உத்தம பத்தினி, அவள் மனது சந்தேகித்ததால் இன்று போக வேண்டாம், நாளைக்குப் போ.

அபிமன்யு: இல்லையம்மா! இன்றுதான் பத் வியூகப் போர்!

சுபத்திரை: அதில்வெற்றி பெற்று வர யாராலும் முடியாது! என் அண்ணன் கிருஷ்ணன் ஒருவனுக்குத்தான் தெரியும் அதன் ரகசியம்.

அபிமன்யு: எனக்கும் தெரியும் அம்மா! பூர்வஜன்ம வாசனையைப் போல அதன் ரகசியம் எனக்கு அறிமுகமாகி இருக்கிறது.

சுபத்திரை: (மறுபடியும் பழைய நினைவு வந்து) அது போதாது! போதாது! உத்தரா, இன்று இவனை யுத்த களத்திற்குப் போக விடாதே!

உத்தரை: நான் சக்தியற்றுப் போய் விட்டேனே! நீங்கள் சொல்லுங்கள்!

சுபத்திரை: (உத்தரையிடம் மெதுவாக) உத்தரா, நீ தனியாக இருந்து அவனைக் கண்டிப்பு செய்து விடு, நான் போகிறேன், (உரக்க) அபிமன்யு, நான் போய் வருகிறேன். நீ இன்று சிரமபரிகாரம் செய்து கொள்!
(போகிறாள்)

அபிமன்யு: சிரமம் என்ன? பரிகாரம் என்ன? சுத்த வீரனுக்கு இரண்டும் இல்லை.

உத்தரை: (அவன் அருகில் வந்து தோளில் கை வைத்துக்கெஞ்சலுடன்) இதோ பாருங்கள். நாளைக்குப் போங்கள். நான் கேட்டதெல்லாம் என் மனமத்தில் ஒரு பயத்தை உண்டாக்கிவிட்டது-பத்ம வியூகம் என்ற பெயர்.

அபிமன்யு: அதுதான் எனக்கு உகந்த முறை, அதில் ஜயித்தாலும் அல்லது-நீ சந்தேகிப்பது போல-மடிந்தாலும் என் வீரியம் அழியாக் கீர்த்திபெற்றுவிடும்.

உத்தரை: (அவன் தோளில் விம்மிக்கொண்டு) இதற்காகவா நான் பெண்ணாய்ப் பிறந்தேன்?

அபிமன்யு: என்ன குறை? அர்ச்சுன மகாராஜன் நாட்டுப்பெண்! அபிமன்யுவின் பத்தினி! என் புத்திரனின் தாய் இன்னும் என்ன வேண்டும்?

உத்தரை: நீங்கள்!

அபிமன்யு: எனக்காக மட்டும் தானா நீ ஜீவிருத்திருக்க வேண்டும்? இல்லை! நீயும் நானும் ஒருவருக்கொருவர் தான் உயிர் வாழ்வது என்ற நிலைமை மாறிவிட்டது!

உத்தரை: (திகிலுடன்) என்ன?

அபிமன்யு: என்று நீ கர்ப்பவதி ஆனாயோ அன்றே நானும் நீயும் வசித்த தனிச்சுவர்க்கம் மறைந்துவிட்டது.

உத்தரை: அப்புறம்?

அபிமன்யு: இனிமேல் நமது மக்களுக்காகத்தான் நமது வாழ்க்கை. சுயேச்சை நமக்கு இனிமேல் இல்லை.

உத்தரை: பின் நீங்கள் யுத்தத்திற்கு சுயேச்யைகப் போகலாமோ? அபிமன்யு: அது தர்மம்!

உத்தரை: நானும்-நானும்!

அபிமன்யு: நீ சொல்லுவது தெரிகிறது. அது தர்மமன்று. ஆகையால் கூடாது. நீ பொறுப்பைச் சுமந்து கொண்டிருக்கிறாய்!

உத்தரை: அதனால்?

அபிமன்யு: அந்தப் பொறுப்பால் தான் உன் வாழ்க்கை பயனுடையதாகிறது.

உத்தரை: எப்படி?

அபிமன்யு: இல்லற வாழ்க்கை ஸ்திரீ புருஷர்களுடைய பரஸ்பரத்திருப்திக்காக மட்டுமன்று முக்கியமாக மக்கட் பேற்றுக்காகத்தான்!

உத்தரை: அதுதான் எதற்கு? இந்த மாதிரி யுத்தங்களில் போய் ஆயிரக்கணக்காக மடிவதற்கா?

அபிமன்யு: எப்பொழுதும் யுத்தம் நடந்துகொண்டிருக்கிறதா? மேலும், யுத்தம் எதற்காக என்று நினைக்கிறாய்?

உத்தரை: சௌரிய நிரூபணத்திற்காகத்தான்!

அபிமன்யு: அன்று, அன்று! சௌரியம் யுத்தத்தில் ஏற்படும் காரியமே தவிர அதன் காரணமன்று.

உத்தரை: பின் எது காரணம்?

அபிமன்யு: ஏன், அதர்மம்தான்!

உத்தரை:அதற்காக ஏன் யுத்தம் செய்ய வேண்டும்?

அபிமன்யு: அதர்மம் கொழுந்துப்போய் யுத்தத்திற்கு வந்தால்?

உத்தரை: தர்மத்திற்குத்தான் வெற்றி என்று எப்படி நிச்சயம்?

அபிமன்யு: நிச்சயமில்லையென்றே வைத்துக்கொண்டாலும் தர்மத்தைக் காக்க சண்டையிடாவிட்டால் சௌரியத்தின் பிரேயோஜனந்தான் என்ன?

உத்தரை: நீங்கள் எதற்காகப் போராடுகிறீர்களோ அதுதான் தர்மம் என்பதற்கு என்ன சாட்சி?

அபிமன்யு: மனதுதான்! வேறு எது உண்மை?

உத்தரை: ஆனால், இந்த யுத்தம ராஜ்யத்திற்காக அல்லவா?

அபிமன்யு: அதற்கு மட்டுமல்ல. மூலகாரணம் துரியோதனாதிகளின் அக்கிரமம். திரௌபதிக்குச் செய்த அவமானத்திற்கு மேற்பட்ட அக்கிரமமுண்டா உலகில்?

உத்தரை: (உணர்ச்சியுடன்) இல்லை! அது பொறுக்க முடியாததுதான். அயோக்கியர்களை வதம் செய்ய வேண்டும்!

அபிமன்யு: (சமயத்தில் சட்டென்று) பின் ஏன் எனக்கு அனுமதி கொடுக்க மாட்டேன் என்கிறாய்?

உத்தரை: ஏனா? சுத்த வீரனுடைய பத்தினியாகிய எனக்கு நேரிடப்போவதைப் பற்றி எனக்கு பயமில்லை. ஆனால்.....

அபிமன்யு: நான் யுத்தத்தில் இறந்தால் என்ன? க்ஷத்திரியனுக்கு அது ஏற்பட்டது தானே?

உத்தரை: நான் தொடர முடியாதா?

அபிமன்யு: முடியாது, முடியாது! உனக்கோர் பொறுப்பிருக்கிறதென்கிறேனே! நீ அதைத்தள்ளிவிட முடியாது!

உத்தரை: (நிலை குலைந்து) நான் என்ன செய்வேன்?

அபிமன்யு: ஏன், நான் தான் உன் உயிரை இன்பத்தால் நிரப்பிவிட்டேனே! அந்த நினைவிலேயே ஒரு வாழ்க்கையைக் கழித்து விடலாமே!

உத்தரை: (பழைய நினைவு வந்து) ஆ! நமது ஊக்கத்தால் ருதுக்களின் ஊட்டத்தையே வற்ற அடித்தோம்! தென்றலில் இனிமேல் தெம்பு இல்லை, சந்திரிகையில் சீதளமில்லை. மணங்களில் இனிமேல் நமக்கு வாசனை இல்லை.

அபிமன்யு: பரஸ்பர வனப்பிலேகூட இனிமேல் இனிப்பில்லை! உத்தரை: பின்?

அபிமன்யு: பரஸ்பர உணர்ச்சியிலேதான் உயிர் இருக்கிறது. அந்த உணர்ச்சிதான் அழிவற்றது. அதோ சங்குகளை ஊதுகிறார்கள், என் நாடிகள் பறக்கின்றன. நான் போகிறேன்!

(திடீரென்று தன்னை விடுவித்துக்கொண்டு வெளியேறுகிறான்)

உத்தரை: போய் வருகிறீர்களா?

(மூர்ச்சை அடைகிறாள்)

## ஆத்ம சிந்தனை

**(பழைய** காலத்துக் கூரை வீடு ஒன்று, கூடத்தின் நடுவில் மூன்று அடுக்குகள் கொண்ட பூஜை அலமாரி, செம்பாலான அழகிய கிருஷ்ண விக்கிரகம் ஒன்று நடுவில் அலங்கரித்து வைக்கப்பட்டிருக்கிறது. விக்கிரகத்திற்கு இரண்டு பக்கங்களிலும் இரண்டு சிறு வெங்கலக் குத்துவிளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன.

அதே கூடத்தில், கொஞ்சம் சமையலறைப் பக்கமாக, கீதா பாகவதர் இலைமுன், சாப்பிட உட்கார்ந்திருக்கிறார். சுமார் ஐம்பது வயதான குடும்பத் தலைவர்.

அவர் மனைவி துளசிபாய் பரிமாற சமையலறையிலிருந்து கையில் அன்னத்துடன் வருகிறாள். அவள் நாற்பது வயதடைந்தவள்)

கீதா பாகவதர்: துளசி, அவனுடைய அன்னம் இலையில் விழத்தவறுவதில்லை. ஜீவனத்தைப் பற்றி நாமேன் அனாவசியமாகக் கவலைப்பட வேண்டும்? எதற்காக வாழ்க்கையில் ஒவ்வொரு சௌகரியத்தையும் தேடித் திரிந்துநாளை வீணாக்க வேண்டும்? பஜனை செய்து பொழுது போக்கலாமே! உஞ்ச விருத்தி எடுக்கலாமென்று நீ ஓரிரண்டு தடவை சொன்னது கூட எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. எதற்காக உஞ்சவிருத்தி செய்ய வேண்டும்?

(பரிசேஷணம் செய்கிறார். பரிமாறிக்கொண்டிருந்த துளசியின் கண்களிலிருந்து இரண்டு நீர்த்துளிகள் கட்டுக்கடங்காமல் கிளம்பி இலையில் உதிர்ந்து விடுகின்றன. அதை கண்ட பாகவதர் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்க்கிறார்)

துளசி: ஜலத்தாலேயே அன்ன சுத்தி செய்யுங்கள்!

பாகவதர்: (கேட்காமல்) துளசி! என்ன விசேஷம்? ஏன் கண் கலங்குகிறாய்? என்ன நேர்ந்துவிட்டது? அற்பமான இந்நினைவுகள் உன்னைப் பாதிக்காதே!

துளசி: (கண்ணீர் அடைத்த குரலுடன்) ஒன்றுமில்லை சாப்பிடுங்கள்.

பாகதவர்: ஒன்றுமில்லையா! பின் ஏன் இந்தக் கண்ணீர்? அதுவும் இப்பொழுது? நான் சாப்பிடும் பொழுது?வாய் திறந்து சொல், மறைக்காதே!

துளசி: (தட்டைக் கையில் வைத்துக்கொண்டு நின்றபடி, தலைநிமிர்ந்து) ஈசுவரனுடைய இச்சை நான் இன்று உங்களிடம் வாய் திறந்து சொல்லித்தான் ஆக வேண்டும் என்பது போலிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படி ஏன், இந்தச் சமயத்தில், ஏன் கண்ணீர் கட்டில் அடங்காமல் போக வேண்டும்? உங்களுடைய ஏகாக்கிரமான பக்தி நிலைக்குப் பங்கம் வரக்கூடாதென்றே இவ்வளவு நாள்கள் என் வார்த்தைக்கு ஒரு தடைபோட்டு நிறுத்தி வைத்திருந்தேன்.

பாகதவர்: என்ன வார்த்தை அது, துளசி?

துளசி: அதா? நம் வாழ்க்கையின் உண்மை நிலையை விளக்கும் ஒரு தரித்திர வார்த்தை இன்று அது அணையை மீறிப்புறப்பட்டு விட்டது. நான் என்ன செய்வேன்!

பாகவதர்: பரவாயில்லை, சொல் நீ சொன்னதுபோல தரித்திர வார்த்தைகளா என் பக்தியைக் குலைக்க முடியும்? முடியாது! பாதகமில்லை, சொல்!

துளசி: கூடாது, கூடாது! உங்கள் அனன்ய சிந்ததை, பகவானைப் பற்றிய வேறற்ற நினவு, குலைந்துவிடும். அதற்கு நான் காரணமாக மாட்டேன். என்னுடன் நிற்கட்டும் இந்த உள்ளக் குலைவு. நீங்களும் வேறு அதை உள்ளத்தில் கொண்டு தொல்லைப்பட வேண்டாம்!

பாகவதர் இனிமேல் நீ என்னிடம் சொல்லாமல் இருக்க முடியாது. அதை அறியாமல் நான் ஆகாரம் செய்ய மாட்டேன்!

துளசி: அறிந்தால் ஒரு வேளை ஆதாரமே செய்ய மாட்டீர்களே, என்ன செய்வது?

பாகவதர்: இல்லை, இல்லை, சொல், உடனே சொல்!

துளசி: ஈசுவரா, உன் ஆக்ஞை! சொல்ல வேண்டுமா? இதோ இலையில் பரிமாறி இருக்கிறேனே சுத்தன்னம்–

பாகவதர்: சரிதான் இருக்கட்டும், விஷயத்தைச் சொல்!

துளசி: (வேகமாக) அதை, நாளை எவ்வாறு நான் பரிமாறி நீங்கள் எப்படிச் சாப்பிடப்போகிறீர்கள் என்ற எண்ணம் உதித்தது– மனது கட்டுமீறி விட்டது.

பாகவதர்: (ஆத்திரத்துடன்) என்ன சொல்லுகிறாய் துளசி? எனக்கொன்றும் விளங்கவில்லையே!

துளசி: (சுருக்கமாகவும் தீர்மானமாகவும்) விளங்குவதற்கு ஒன்றுமில்லையே! இன்று நாம், நாளைய போஜனத்திற்கு வழியற்ற ஏழைகளாகி விட்டோம்!

பாகவதர்: ஏழைகளா! நமது சொத்தெல்லாம் எங்கே போயிற்று?

துளசி: உங்கள் சகோதரர் உபயோகமற்ற இந்த வீட்டையும், வேண்டாத பொருள்களையும் நமது பாகமாகப் பரித்துவிட்டு மற்றதைத் தனது பாகமாக எடுத்துக்கொண்டு விட்டார்.

பாகவதர்: என்ன, என்ன சகோதரனா அப்படி; செய்தார்? நீ என்னிடம் ஏன் இது வரையில் சொல்லவில்லை?

துளசி: கூடாது என்றுதான். உங்கள் ஏகாத்திரமான பக்தியின் நடுவில் நான் தலையிடக்கூடாது என்று உத்தரவு செய்திருக்கிறீர்கள் அல்லவா?

பாகவதர்: அதற்காக?

துளசி: சொல்லவில்லை. இவ்வளவு காலமாக அப்பொருள்களை ஒவ்வொன்றாக விற்றுவீட்டை நடத்தினோம் இன்று என் மங்கள சூத்திரம் தான் மிகுந்திருக்கிறது. வேறு ஒன்றும் கிடையாது.

பாகவதர்: என் சகோதரனா? எனக்கேன்? அல்ல என் சகோதரனை ஏன் சொல்ல வேண்டும்? அவன்மேல் பிசகில்லை. பகவான் தான் ஆமாம். அவர்தான் சந்தேகமென்ன? அவர் தான் காரணம்!

துளசி: இல்லை, நமது துர்ப்பாக்கியத்திற்கு அவர் என்ன செய்வார்?

பாகவதர்: அவர் என்ன செய்வாரா, என்ன செய்யக்கூடாது? செய்வதாகத்தானே ல்லி இருக்கிறார்! வேறு நினைவற்றுத் தேகத்தியானமாக என்னை யார் உபாசிக்கிறார்களோ அவர்களது யோக க்ஷேமத்தை நான் ஏற்று நடத்துவேன் என்று கீதையில் அவர் வாக்கு கொடுக்கவில்லையா? கீதை சுலோகத்தில் அர்த்தம் இதுதானே?

துளசி: ஆமாம்! ஆனால்

பாகவதர்: ஆனாலே கிடையாது! அந்தப் பொறுப்பு எங்கே? துளசி: அதாவது தாங்கள்.

பாகவதர்: (உணர்ச்சியுடன்) அதாவதென்ன? ஒன்றுமில்லை. வார்த்தைக்கு ஒரே பொருள்தான்! எப்பொழுது பகவான் வார்த்தையைக் காப்பாற்ற வில்லையோ, என்னுடைய பக்தி நிலையில்தான் பிசகு ஏற்பட்டிருக்க வேண்டும்.

துளசி: இல்லை–பிசகே இல்லை. நானும் அதைக் கலையாமல் பாதுகாத்து வந்தேன்!

பாகவதர்: (இளகி) நீ சொல்வது உண்மை, துளசி! உன்னைப் போல என் பக்தி நிலையை யாரால் காக்க முடியும்? முடியாது...... பின் ஏன், அவர், கிருஷ்ணன், தன் பொறுப்பை உணரவில்லை? அவர் சொன்ன சொல் என்னவாயிற்று? அதற்கென்ன அர்த்தம்?

துளசி: ஐயோ, நீங்கள் இப்படிப் பேச.....

பாகவதர்: (செவி சாய்க்காமல்) அந்த வாக்கியம் பொய்! பொய்! அதேன் பின் இருக்க வேண்டும்?

துளசி: (பதறி) என்ன இப்படிப் பேசுகிறீர்கள்?

பாகவதர்: பேசாமல்? பேசுவது மட்டுமா? இதோ செய்யவும் செய்கிறேன்.

(பாகவதர் திடீரென்று இலையிலிருந்து எழுந்து அலமாரியிலிருந்து சுவடியை எடுத்து அதில் மேற்கண்ட சுலோகம் இருந்த இடத்தில் எழுத்தாணியால் மூன்று முறை கீறி எறிந்துவிட்டு வெளியேறுகிறார்.)

துளசி: (ஸ்தம்பித்துப்போய்) அடடா! என்ன காரியம் நடந்து விட்டது! நான் ஒன்றுமே தெரியாமல் நின்று கொண்டிருக்கிறேனே! என்ன அபராதம்! பகவான் பொறுப்பாரா? நான் ஏன் இப்படிச் செயலற்றுப் போய்விட்டேன். இப்பொழுது? என்னுடைய பக்திக்கே பங்கம் வந்துவிட்டதே!

(நடையில் யாரோ ஓர் யாத்திரிகர் வருகிறார். எங்கோ பார்த்த மாதிரி அவர் முகம் துளசிக்குப் பரிச்சயமாக இருக்கிறது. அவர் யௌவன புருஷர்)

யாத்திரிகர்: ஐயா!

துளசி: யாரது?

யாத்ரிகர்: பாகவதர்–எங்கே? அவரைப் பார்க்க வந்தேன், தாயே!

துளசி: வெளியில் சென்றிருக்கிறார். நீங்கள் யார்?

யாத்ரிகர்: நான் அவருடைய தமையன் மகன்.

துளசி: தமையன் மகனா! பல வருஷங்கள் ஆனதால் அடையாளம் தெரியவில்லை, வாப்பா!

யாத்ரிகர்: ஆமாம்! பரம சாதுவான தம்பியை வஞ்சித்த தமையனின் மகன் நான்! என் தகப்பானாருடைய

அபராதத்திற்காகக் காணிக்கை செலுத்த வந்திருக்கிறேன். அவர் சொத்தை அபரிகத்த விஷயம் எனக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. உடனே, ஒரு நாள்கூடத் தாமதம் செய்யாமல் சொத்தை எடுத்துக்கொண்டு விரைந்து வந்தேன். வழியில் ஒரு மூங்கில் காட்டில் அகப்பட்டுக்கொண்டு வழிதப்ப விட்டுவிட்டேன். தாமதமாகிவிட்டது. இல்லாது போனால் முன்பே வந்திருப்பேன். பாருங்கள், மூங்கில் முட்கள்கூடத் தலையில் கீறிவிட்டன!

(தலைப்பாகையை அகற்றி நெற்றியிலிருந்த, மூன்று ரத்தக்கீற்றுகளைக் காட்டுகிறார். அவற்றைக் கண்டு, பாகவதர் ஏட்டைக் கீறின ஞாபகம் வந்து, துளசி பரவசமாகி மெய்மறக்கிறாள். அவள் கண்களுக்கு எதிரிலிருந்த உருவம் கிருஷ்ண பகவானாகத் தோன்றுகிறது. பிரக்ஞையற்றுப் பூமியில் விழுகிறாள்). இதென்ன சங்கடமாகப் போய்விட்டதே! நான் யார் என்று அறிவித்தது பிசகு. நான் இங்கே வந்ததே பிசகு. பணத்தை வைத்துவிட்டுப் போய் விடுகிறேன்.

(தெருவில் இறங்கி ஒரு பக்கம் போகிறார் மற்றொரு பக்கமாகப் பாகவதர் உள்ளே நுழைகிறார்)

பாகவதர்: எல்லாம் சுத்த மோசடி, பொய்! இந்தப் பாழும் நம்பிக்கையைக் கொண்டல்லவா பேதை துளசியையும் இத்தனைநாள் நரக வேதனைக்குள்ளாக்கினேன்! துளசி, துளசி... இதென்ன, மூச்சைப்போட்டுக்கிடக்கிறாள். பக்கத்தில் இதேது பணம்!

(துளசிக்குப் பிரக்ஞை வருகிறது. மெதுவாகக் கண்ணைத் திறந்து பார்க்கிறாள். பாகவதர் அவள் அருகில் சென்று பிரமை கொண்டு நிற்கிறார்)

துளசி: அவர் எங்கே?

பாகவதர்: எவர்?

துளசி: பகவான்!

பாகவதர்: பகவானா!

துளசி: ஆமாம்! பரமாத்மா இங்கே வந்திருக்கிறார், ஐயோ, அவர் நெற்றியில் அப்படியேன் கீறினீர்கள்?

பாகவதர்: என்ன!

(அவருக்கு எல்லாம் உடனே விளங்கி விடுகிறது. கை கூப்பிக்கொண்டு நிற்கிறார், கண்ணீர் வடிகிறது)

துளசி: ஐயனே! உங்களால் நான் இப்பேறு கொண்டேன்!

பாகவதர்: துளசி! ஆத்திரப்பட்டு நான் பலனை இழந்தேன். நீதான் உண்மையான அனன்ய சிந்தை பெற்றவள். நீதான் அவர் தரிசனத்திற்கு ஏற்றவன்.

(துளசியின் தலையில் கரத்தால் தடவுகிறார்). இருவரும் கிருஷ்ண விக்கிரகத்தின் அருகிலிருந்த சுவடியை எடுத்து கண்களில் ஒத்திக்கொள்கிறார்கள். கிருஷ்ண முராரே! என்று பஜனை செய்கிறார்கள்.)

**பிரதாப்சிங்**

**(ராஜபுதனத்தின்** ஓரத்தில் ஒரு காடு? அதன் நடுவில் அமைந்த ஒரு குடிசையின் வாசலில் ராணா பிரதாப் சிங் நின்று கொண்டிருக்கிறார். பக்கத்தில் அமர்சிங் நின்று கொண்டிருக்கிறான்.

இருட்டிக்கொஞ்சநேரம் ஆகிவிட்டது. ஜகத்தின் வாயடைபட்டது போல திடீரென்று மௌனம் எங்கும் நிறைந்தது. தூரத்திலிருந்த ஆரவல்லி மலைகளின் சாரல் சதுப்புகளிலிருந்து கிளம்பிய கொள்ளிவாய் பிசாசுகள் மட்டும் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. நடுநடுவே ஏதாவதொரு காட்டு மிருகம் அலறிய சத்தம் கேட்டது)

அமர்சிங்: மகராஜ்! இன்று ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள். ஆனாலும்?

பிரதாப்சிங்: என்ன அமர், எப்பேர்ப்பட்டவனையும் மனங்கலங்க வைக்குமே நமது நிலைமை. ராஜபுத்திர குலம் வீழ்ச்சிடைந்துவிட்ட விபரீதம்தான் என்னை-

அமர்சிங்: நீங்கள் இருக்கிறவரை அந்த வார்த்தையை யார் சொல்லத் துணிவார்கள்?

பிரதாப் சிங்: வீரமற்றவர்களைப் போல் ராஜபுத்திரர்கள் மொகலாயருக்குத் தலைவணங்கிப் பணிந்துபோகும் காலமா வந்துவிட்டது? ராஜஸ்தானத்தின் மானத்தை இன்னாள் வரை, பெண்டு பிள்ளைகளையும் பலியிட்டு, உயிர் கொடுத்துக் காத்த சிங்கங்கள் நரிகள் ஆகவிட்டனவா?

அமர்சிங்: நீங்கள் இருக்கிறவரை

பிரதாப் சிங்: அதென்ன பிரையோஜனம், நான் இருந்தென்ன பயன்? நான் இறந்தது போலத்தான்... எங்கிருந்தோ நேற்று இந்துஸ்தானத்தில் வந்து நுழைந்த அன்னியனுக்கு ஆளாகி அவர்களிடம் உத்தியோகம் பெறும் துரோகிகளாக ராஜபுத்திரர்கள் மாறிவிட்டார்களே! மொகலாயர்களை நான் குற்றம் சொல்லவில்லை. அவர்ளை நான் மெச்சக்கூடச் செய்கிறேன். அவர்கள் வீரத்திற்கும் ஊக்கத்திற்கும்-ராஜபுத்திரர்களைத்தான் நான் கேட்கிறேன்.

அமர்சிங்: உங்களைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்?

பிரதாப்சிங்: இல்லாமலென்ன? இருக்கிறவர்கள் என்ன சோறு திங்கவில்லையா? குலத்தை, குன்றின் மேல் விளக்காகத் தூக்கி வைத்த அஞ்சா நெஞ்சமும் சுயமரியாதையும் எங்கே போய்விட்டன? மொகலாயரை எதிர்த்துப் போராட இப்போது ஏன் வலுவற்றுப்போய் விட்டார்கள் ராஜபுத்திரர்கள்? தேவி மாதாவின் அருள் குன்றி விட்டதா?... இல்லை அவள் மறக்கமாட்டாள்-ராஜபுத்திரர்கள்தான் தங்கள் கடமையை மறந்துவிட்டார்கள்.

அமர்சிங்: அவர்கள் மேல்தான் என்ன பிசகு, மகராஜ்?

பிரதாப்சிங்: என்ன பிசகா? இன்னும் என்ன பிசகு செய்ய வேண்டும்? தங்கள் தர்மத்தைக் கைவிட்டு விட்டார்கள். தியாக புத்தியைப் பறிகொடுத்துவிட்டார்கள். டாம்பீகத்தில் ஈடுபட்டு வலிமையை விற்றுவிட்டார்கள். ஆம்.... பரஸ்பர அசூயையாலும் ஒற்றுமையில்லாமையாலும் அவர்களிடையே ஏக பத்தியம் போய்விட்டது....

அமர்சிங்: நீங்கள் ஏன் மறுபடியும் அந்த ஏக பத்தியத்தை ஸ்தாபிக்கக் கூடாது?

பிரதாப்சிங்: இனிமேல் எப்படி முடியும்? சுக வாழ்வால் ஏற்பட்ட ஒரு தளர்ச்சி நம்மை வந்து ஆக்கிரமித்துக்கொண்டு விட்டது. ராஜபுதனம் சீர்குலைந்துவிட்டது. இனிமேல் என்ன செய்வது?

அமர்சிங்: நீங்களே தளர்ச்சி கொண்டால்?

பிரதாப்சிங்: ஓரிருவர் தனிப்பட்டு நின்று என்ன பயன்? அவர்களுடைய எதிர்ப்பு எவ்வளவு பலமாயிருந்தாலென்ன? மொகலாயர்களுடைய சைனியம் அவர்களைச் சுலபமாக ஒடுக்கிவிட்டது.

அமர்சிங்: நீங்கள் ஒடுங்கவில்லையே! அக்பர் பாதுஷாவிற்க நீங்கள் முடிசாய்க்கவில்லை. அன்னியனுக்கு அடிமையாகாத ஒரு ராஜபுத்திரர் இருக்கிறீர்கள்! ராஜபுதனம் மறுபடியும் சுயேச்சை பெற்று, ராஜபுத்திரர்கள் பெயர் மறுபடியும் களங்கமற்று ஓங்கும் வரையில் படுக்கையில் படுப்பதில்லையென்றும் சுவர்ண பாத்திரத்தில் சாப்பிடுவதில்லையென்றும் கடுமையான விரதம் பூண்டிருக்கிறீர்களே!

பிரதாப்சிங்: என்ன பயன்?

அமர்சிங்: ராஜஸ்தானத்தில் ராஜபுத்திரன் இல்லாமற் போகவில்லை!

பிரதாப் சிங்: சித்தூர் வம்சம்.

அமர்சிங்: ராணா பிரதாப்சிங் உயிருடன் இருக்கிறார்.

பிரதாப்சிங்: சித்தூர் போய்விட்டது!

அமர்சிங்: ராஜபுத்திர வீரம் போகவில்லை!

பிரதாப் சிங்: ஏன்?

அமர்சிங்: அது அமரஜோதி!

பிரதாப் சிங்: எப்பேர்ப்பட்ட வம்சம் அம்பர வம்சம்! மான்சிங் அதில் வந்தா பிறக்க வேண்டும்! துரோகி! மொகலாயனுக்குத்தன் தங்கையை விற்றானே-பதவிக்காக!

அமர்சிங்: அவன் துரோகி-அவன் பெயரை உங்கள் வாயால் உச்சரிக்கக்கூடாது!

பிரதாப்சிங்: அவனைச் சொல்லுவானேன்? நான் ஏன் ராஜ்யத்தை விட்டுவிட்டு இங்கேவந்து இருக்கிறேன். மொகலாயருடன் யுத்தம் செய்து உயிர் துறக்க வேண்டியவன், பேடி போல இங்கேன் வந்து குடும்பத்தை நடத்திக்கொண்டிருக்கிறேன்? குடும்பம், பெண்சாதி, பிள்ளை-என்ற பிரமைஅதல்லவா என்னை இப்படிச்செய்துவிட்டது.

அமர்சிங்: நாங்கள் அல்லவா உங்ளை நிர்ப்பந்தம் செய்து இங்கே வைத்திருக்கிறோம்

பிரதாப் சிங்: உங்கள் நிர்ப்பந்தத்திற்குட்பட எனக்கென்ன அதிகாரம்? என் குடும்பத்தைக் காத்து என் மானத்தை இழந்தேன். சை!..... என் மானமா?- ராஜதானத்தின் மானம்! நான், ராஜபுதனத்தைக்காக்க வேண்டியவன்-இங்கே இப்படிப் பெண்டு பிள்ளைகளுடன் உழன்று கொண்டிருந்தால், ஐயையோ! ராஜ புத்திர சரித்திர மல்லவா அதோகதியாகிவிடும்! என் எண்ணமோ-

அமர்சிங்: உங்கள் எண்ணம் இல்லையே

பிரதாப் சிங்: நான் துரோகி! பவானி ஆணை! அவள் என்னை மீட்பாளாக! இந்தக் குடும்ப வாஞ்சையிலிருந்து என்னை விடுவிப்பாளாக! (உரக்கக் கத்துகிறார். மறுபுறமிருந்த ராணி அதைக்கேட்டு திகில் அடைகிறாள்)

அமர்சிங்: மகராஜ்! சாந்தடையுங்கள்.

ராணிதுர்க்கா: (பிரவேசித்து) எதற்காக இப்படி ஆயாசப்படுகிறீர்கள்? எதற்கும் சரியான காலம் வரவேண்டும். கால பலம் சரியாக இல்லை. காலம் மாறும். பாண்டவர்களே காலம் மாறுமென்று காட்டில் காலங்கழிக்கவில்லையா? ஆனால்-வேறு எந்தக் கஷ்டமும்பட்டுவிடலாம். வறுமையுண்டே, அதுதான் தாங்கமுடியாததாக இருக்கிறது. நாம்கூட சகித்துவிடலாம். ஆனால் குழந்தைகள்.

பிரதாப் சிங்: உம், என்ன சொல்கிறாய் துர்க்கா?

ராணி: குழந்தைகள்தான் ஏமாறுகிறார்கள்.

அமர்சிங்: வாழ்க்கையின் விபரீதமான ஏற்றத் தாழ்வுகளை அறியாத பருவம் அல்லவா?

ராணி: நமது நிலைமை அவர்களுக்கு அர்த்தமாகவில்லை.

அமர்சிங்: எப்படி ஆகும்? கண்கண்டு அனுபவித்த ராஜபோகம் ஒரு கனவுபோல மறந்துவிட்டால்! பாவம்! சவலைப் பிள்ளைகள் போல ஏக்கம் கொண்டு குன்றுகிறார்கள்.

பிரதாப்சிங்: (கோபத்துடன்) ஹும்! என்ன சொல்லுகிறீர்கள் இருவரும்?

ராணி: ஒன்றுமில்லை, குழந்தைகள் நமது சோகம் கவிழ்ந்த முகங்களைக் கண்டு பயந்து மௌனமாகிறார்கள்.

அமர்சிங்: அவர்களுடைய கஷ்டம்தான் சகிக்க முடியவில்லை.

ராணி: நமக்குத் தெரிகிறது நமது லட்சியத்தின் மேன்மையும், வீரத்தின் கௌரவமும்-நாம் குழந்தைகளல்ல. அவர்கள் அஞ்ஞானிகள்! இருக்கட்டும்! ஈசுவரன்-தேவி, கைவிடமாட்டாள், தைரியமும் நம்பிக்கைவிடாது.

பிரதாப் சிங்: (கோபம் பொங்க) சீ, போ அந்தப்புரம்! வேதாந்தத்தைக் கேட்டது? உன்னாலல்லவா நான் மானத்தை இழந்தேன்! உனக்காவது-நீ ராஜபுத்திர ஸ்தரீ! மானம் இருந்திருந்தால் என்னை அன்றே யுத்தகளத்திற்கு அனுப்பியிருப்பாய்-உன்னைச் சொல்லி என்ன பயன்? ஏன் புத்தியல்லவா மங்கிப் போய்விட்டது! உன்னையும் உன் குழந்தைகளையும் காப்பாற், இந்த ஈனவாழ்வு வாழ, உயிரை விற்றுவிட்டேனே, அடாடா! (பெருமூச்சு விடுகிறார்)

ராணி: ராஜபுத்திர வீரன் இந்த மாதிரி ஏங்குவது வழக்கமில்லை. காலத்திற்கு விட்டுக்கொடுக்க வேண்டியது வீரத்திற்குக்கூட மிகவும் அவசியம். ஆயிரம் பேர்களுக்கு முன்னால் இருவர்கள் மூடத்தனமாய்ப் போய் விழுவதும் பேதமை. புலி பாய்வதற்குத்தான் பதுங்கும். அது பயப்படுவதென்று ஒளிவதன்று.

பிரதாப்சிங்: உனக்கெப்படித் தெரியும் ஒரு வீரனின் மனவேதனை? என்னவானாலும், ராஜபுத்திர குலமானாலும் நீ பெண்!

ராணி: நான் மேவார் ராணி!

பிரதாப்சிங்: இல்லையென்றுதான் நிரூபித்துவிட்டாயே! வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? வீரனுக்கு முன் யோசனையே கிடையாது. கூடாது! எந்த நிமிஷம் யோசனை செய்ய ஆரம்பிக்கிறானோ அந்த நிமிஷம் முதல் அவன் வீரன் அல்ல பயங்கொள்ளி!

ராணி: (கோபத்துடன்) சித்தூர் வம்சத்தில் பயங்கொள்ளிகள் கிடையாது. என் கையைப் பிடித்தவர் பயங்கொள்ளி அல்ல!

(மறுபுறமிருந்து குழந்தைகள் கத்தும் சத்தம். துர்க்கா உள்ளே ஓடுகிறாள்)

பிரதாப்சிங்: அவள்தான் என்ன செய்வாள் பாவம்! மகாதைரியசாலிதான்!

அமர்சிங்: ராணியின் திடம் யாருக்கும் வராது!

(துர்க்கா உரக்க அழும் சத்தம் கேட்கிறது)

பிரதாப் சிங்: (கேட்டு) என்ன துர்க்காவா அழுகிறாள்? என்ன விபரீதம் இன்று? துர்க்கா இங்கே வா! ஏன், எதற்காக இந்த அதைரியம்?

ராணி: (பிரவேசித்து பிரதாபின் காலில் வந்து விழுந்து) என்னையும் கொன்று, குழந்தைகளையும் கொன்று விடுங்கள், நீங்கள் அக்பரை எதிர்த்துச் செல்லுங்கள். இந்த வாழ்வு இனிமேல் வாழ முடியாது! வேண்டாம்! நானே நெருப்பில் பிரவேசித்து விடுகிறேன்.

பிரதாப் சிங்: என்ன நடந்தது, சொல்!

ராணி: இரவு உணவிற்கு விதியில்லாமல் வாழலாமா?

பிரதாப் சிங்: நாம்தான் உபவாசமாயிற்றே!

ராணி: குழந்தைகள்!

பிரதாப் சிங்: அமர்செய்த ரொட்டிகள்!

ராணி: கொஞ்சம்தான் பாக்கி இருந்தது. அதை அவர்களிடம் கொடுத்துவிட்டு உங்களிடம் வந்தேன். அப்பொழுது காட்டுப்பூனையொன்று வந்து அதையும் எடுத்துக்கொண்டு போய்விட்டது.

பிரதாப் சிங்: குழந்தைகள் பட்டினியா!

ராணி: இனிமேல் என்னால் உயிர் வாழ முடியாது!

பிரதாப் சிங்: (மெய்ம்மறந்து உரக்க) அமர்!

அமர்சிங்: மகராஜ்! இதோ இருக்கிறேனே!

பிரதாப் சிங்: (தீர்மானமாக) பிரதாப் பணிந்ததுவிட்டான்! சமாதானத்திற்குத் தயார் என்று அக்பரிடம் தெரிவி, போ, நிற்காதே இங்கே!

அமர்சிங்: மகராஜ்! பதற வேண்டாம்!

பிரதாப்சிங்: (கேட்காமல்) துர்க்கா, ராஜபுத்திர ஜோதி நசித்துவிட்டது. உளுத்துப்போன மூங்கிலாகிவிட்டது. அரண்மனைக்குத் திரும்புவோம் வா, அக்பரின் அடியார்களாக! காடும் பசியும் கஷ்டமாக இருக்கின்றன. தியாகம் செய்ய உள்ளே ஒன்றும் இல்லை.

ராணி: மகராஜ்! ஒரு வார்த்தை!

பிரதாப்சிங்: ஒரு வார்த்தையாவது, அரை வார்த்தையாவது! க்ஷத்திரிய குலத்தை அன்று பரசுராமன் அழித்தான் என்பது கதை. இன்று அது பூண்டற்றுப் போய்விட்டது.

ராணி: (தடுத்து) இல்லை, இன்றும் நாம் தலையெடுக்கலாம்!

பிரதாப் சிங்: முடியாது. இதுதான் பரீட்சை, அதற்கென்ன, நாளைக்கு சுயபுத்தி வந்து திரும்பவும் அக்பரை எதிர்க்கலாம். ஆனால் மறுபடியும் சோர்வு வரும். ஆகா!

அக்பர் மகா சாமர்த்தியசாலிதான், குலைக்க முடியாத ராஜபுத்திர வீரியத்தை எவ்வளவு வகைகளில் குலத்திற்கேற்றவாறு குலைத்துவிட்டான்!.. சரி, ராஜஸ்தானத்தின் சரித்திரம் முடிவடைந்துவிட்டது. இனி தூங்கலாம், வா!

**ஊர் வாயிலிருந்து...**

**ம**துரைப் புதுத்தெருவின் தெற்குப் புறத்தில் ஒரு மாடி வீட்டின் வாசல் திண்ணை. அதன் கீழ்த்தாழ்வாரத்தில் கோடைப் பந்தல் ஒன்று போட்டிருக்கிறது.

**இ**ரவு எட்டு மணி, வாசல் திண்ணையில் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. அதன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு காமு, தெருவில் போகும் கூட்டத்தைக் கவனித்துக்கொண்டிருக்கிறாள். அடிக்கடி அவள் பார்வை எதிர்வீட்டுப் பக்கம் செல்கிறது.

**எ**திர்வீட்டுத் திண்ணையில் டாக்டர் சீதாராமன் சாய்வான நாற்காலியில் சாய்ந்துகொண்டிருக்கிறார், அவர் பக்கத்தில் காமுவின் தகப்பனார், சுந்தரம் அய்யர், உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார். டாக்டருக்கு முப்பது, முப்பத்திரண்டு வயதுதானிருக்கும். சுந்தரம் அய்யர் நாற்பது வயது ஆனவர் போல இருந்தாலும் அவர் வயது ஐம்பது.

**கா**முவுக்குப் பதினேழு வயதுதானிருக்கும். வாடினமலர்போல மெலிந்து துவண்டு போயிருக்கிறாள். அவள் முகத்தில் ஏக்கம் எழுதி ஒட்டிருக்கிறது. அவள் ஒரு விதவை.

**கா**முவின் தாயார், மீனாட்சி, உள்ளேயிருந்து வருகிறாள். அவளுக்குச் சுமார் நாற்பத்தைந்து வயதிருக்கும்.

மீனாட்சி:(அதட்டிய குரலில்) என்னடிது? இங்கே வந்து உக்காந்திருக்கே?.... போறவா, வரவா....?

காமு: (துக்கம் அடைத்த குரலில்) என்ன செய்யச் சொல்லுகிறாய், அம்மா? என் உயிருந்தான் போகமாட்டேன் என்கிறது. நான் என்ன செய்வேன்? எங்கேதான் போய் இருக்கச் சொல்லுகிறாய், சொல்!

மீனாட்சி: அதுக்கென்னடீம்மா பண்றது? நான் பார்க்கற கண்ணு! கோவிலுக்குப் போறவா வரவா பார்த்தா, நாளக்கி ஒரு வார்த்தை சொன்னா என்ன பண்றது?

காமு: (கோபத்துடன்): என்ன வார்த்தை சொல்லுகிறது?

மீனாட்சி: எம்மேலே சீறி விழுந்து என்ன பண்றது? ஒரு பேர் வச்சூட்டா...

காமு: (குறுக்கிட்டு) பேர் என்ன வைக்கிறது.

மீனாட்சி: என்னடி இப்படிப் பேசறே வரவர?

காமு: (ஆத்திரத்துடன்) எப்படிப் பேசுகிறேன், வரவா?... நானும் என்னத்தையோ, போகிறதென்று காலத்தைத் தள்ளினால், இங்கே உட்காராதே, அங்கே உட்காராதே, இங்கே அடிவைக்காதே என்றால் நான் என்னதான் செய்கிறது....? பிராணனை விட்டுவிட வேண்டியதுதான். நான் என்ன கட்டையா, ஒரே இடத்தில் கிடக்க?

மீனாட்சி: அடியம்மா, நீ இனிமே கட்டைதாண்டி! ஒன்னிஷ்டம்போல சேய ஒனக்கு ஏது டீ எடம்? என்னிக்கி ஒன் மஞ்சக்குங்மத்தே எழந்தயோ, அன்னிக்கே எல்லாத்தையும் எழந்துட்டயேடி!

காமு: (எரிச்சலுடன்) உயிரை இழக்கவில்லையே, அது இன்னும் இருக்கிறதே...!

மீனாட்சி:அது இருந்தும் இல்லாததுதான்! நீ, அன்னிக்கே, செத்துப்போட்டுடேன்னு தலெ முழுகி விட்டேண்டி (கண்ணைத் துடைத்துக்கொள்ளுகிறாள்).

காமு: நீ இப்பொழுது என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய், அம்மா?

மீனாட்சி: (நல்ல வார்த்தையாக): வாசல்லே தெரிஞ்சவா போவா, இன்னிக்கி ஆடி வெள்ளிக்கெழமே, நீ இப்படித் திண்ணைலே வந்து உக்காந்திருக்கிறத்தெ யாராவது பார்த்துட்டா என்ன சேறது?

காமு: (வேண்டுமென்று ஆத்திரத்துடன்) என்னைப் போல விதவைகள் எவ்வளவு பேர் வெளியில் போகல்லே!

மீனாட்சி: என்னடி இப்படி பேசறே, அவாள்ளாம்–

காமு: அவாள்ளாம் என்ன?

மீனாட்சி: ஐயோ, ஏண்டி இப்படிஎன் வயச்தெரிச்லெக் கெளப்பறே?

காமு: என்னாலே தாங்கமுடியவில்லையே! (காமு தன்னையே மறந்து, துக்க மிகுதியால், உரக்க அழுது விடுகிறாள். டாக்டர் சீதாராமன் இதைக் கவனித்து விடுகிறார். சுந்தரம் அய்யர் பார்த்து விடுகிறார். மீனாட்சி, பரபரப்புடன் யாராவது பார்த்துவிடப்போகிறார்களே என்று தெருப் பக்கம்பார்க்கும்பொழுது அவர்களைப் பார்க்கிறான்)

மீனாட்சி: ஐயையோ, நான் என்ன செய்வேன்? இப்படிப் பண்றயேடி? எதுராத்துலே ஒங்கப்பாவும் டாக்டரும் வாசல்லே இருக்காளேடி! என் மானம் போயிடுத்தே!

காமு: (அழுதுகொண்டே): என் மானமா உன் மானமா?

(சுந்தரம் அய்யர் வருகிறார். பெண் அழுவதைப் பார்த்து அப்படியே இடிந்துபோய் நின்றுவிடுகிறார்).

சுந்தரம் அய்யர்: குழந்தையை என்னடி சொன்னாய்? (காமுவைப் பார்த்து) ஏம்மா அழுகிறாய்?

காமு: (கண்களைத் துடைத்துக்கொண்டு) ஒண்ணும் இல்லேப்பா! (உள்ளே போய்விடுகிறாள்).

சுந்தரம் அய்யர்: (திண்ணையில் உட்கார்ந்து கொண்டு) ஏண்டி, நான் உனக்கு எவ்வளவு தரம் சொல்லுகிறது, குழந்தையை ஒன்றும் சொல்லாதே என்று? அவள் புண்பட்டிருக்கிறது போதாமல் நீ வேறே அவளைக் குத்த வேண்டுமா?

மீனாட்சி: நன்னாருக்கு நீங்க சொல்றது! அவொ எனக்கு சத்ருவோன்னோ, குத்தித்தான் காட்டுவேன்!

சுந்தரம் அய்யர்: பின் எதற்காக அவளை இப்பொழுது அழ வைத்தாய்? டாக்டர்கூட பார்த்துவிட்டு ரொம்பவும் விசாரப்பட்டார்.

மீனாட்சி: (மனஸ்தாபக் குரலில்) நான் எதுக்கு அவளெ அழவெக்கறேன்? வாசல்லே வந்து உக்காந்திருந்தா!

சுந்தரம் அய்யர்: இருந்தாலென்ன?

மீனாட்சி: அம்மா, எதுராளத்துத் திண்ணெலே டாக்டர் இருக்கார், வாசல்லே உட்காராதே! இன்னத்துக்குத்தான்.

சுந்தரம் அய்யர்: எதற்காகச் சொன்னாய்?

மீனாட்சி: வாஸ்தவம்தான்! என்ன சேறது, கொழந்தெ எவ்வளவு நாள்தான் வீட்டிலே அடெபட்டுக் கிடப்பா? கோவில் கொளத்துக்குப் போகாமே இன்னும் எவ்வளவு நாள் இப்படிப் புழுங்கறது அவொ?... ஆனால்–

(சுந்தரம் அய்யர் மீனாட்சி சொன்னதற்குத் தானாக ஒரு அர்த்தம் பண்ணிக்கொண்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைகிறார். மனைவியின் மனம் மாறிவிட்டதென்று எண்ணுகிறார்)

சுந்தரம் அய்யர்: அத்தாண்டி நானும் கொஞ்ச நாளாக உன்னிடம் சொல்ல வேணுமென்று இருந்தேன். இனிமேல் கொஞ்சம் வட தாமதம் செய்யக்கூடாது. ஒரு தகுந்த வரனைப் பார்த்துக் கலியாணம் செய்துவிட வேண்டியதுதான். இனிமேல் ஒரு நிமிஷங்கூட, அவளை இப்படி வைத்துக்கொண்டு என்னால் பார்த்துச் சகிக்க முடியாது. ஊரில் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். எனக்கு இனிமேல் அக்கரை இல்லை!

மீனாட்சி: (தூக்கி வாரிப்போட்டதுபோல): ஐயையோ! இதென்ன ஒங்களுக்கு பைத்தியம் கியித்தியம் புடிச்சிப்போச்சா? நான் ஒண்ணு சொல்றேனே!

சுந்தரம் அய்யர்: நீ என்ன சொல்லுகிறாய்?

மீனாட்சி: கொழந்தேய இப்படி எத்தனெ நாள் வச்சுண்டு இருக்கறது? ஊர்லே வெளிலே, தலெகாட்ட முடியல்லே. கோவிலுக்குப் போனா கேக்கறா, ஜலத்துக்குப் போனா கேக்கறா, எனக்கு மானம் போறது.

சுந்தரம் அய்யர்: அதற்குத்தான் நானும் சொல்கிறேன். இதற்கு முன்னால் எல்லாம் இரண்டு மூன்று வருடமாக எனக்குக் குழந்தையைப் பார்க்கவே சகிக்கவில்லை. அவளோடு பேசக்கூட வெட்கமாயிருக்கிறது. என் குழந்தை முகத்தில் சிரிப்புத் தோன்றாமல், தூங்க முடியவில்லை. இந்த வேதனையை இனிமேல் என்னால் தாங்கவே முடியாது. டாக்டரிடம் கூடச் சொல்லிருக்கிறேன்.

மீனாட்சி: என்ன சொல்லியிருக்கேள்?

சுந்தரம் அய்யர்: ஒரு நல்ல வரண் வேண்டுமென்றுதான்! அவரே இஷ்டப்பட்டாலும்.....

மீனாட்சி: நன்னாருக்கு நீங்க பேசறது!.... ஒங்கம்மா காதுலே படப்போறது. கூடத்துல ஜபம் பண்ணின்டு இருக்கா! நன்னாத்தான் இருக்கும்! தீக்ஷதர் ஆத்துல இப்படியா?

சுந்தரம் அய்யர்: சீ, வாயை மூடு!

மீனாட்சி: எதுக்குத்தான் வயசு ஆக ஆக ஒங்களுக்குப் புத்தி இப்படிப் போறதோ?

சுந்தரம் அய்யர்: எனக்கு?

மீனாட்சி: எனக்குத்தான் இப்பொ சுத்தமா கையாலாகல்லலே, எனக்கென்னமோ கேடுகாலம் பிடிச்சூடுத்து, காரியம் சேயத் தள்ளவேயில்லே! அவளெயும் ஒண்ணும் மடிக்காரியம் சேயல்சொல்ல முடியல்லே.... அவனெ மடியாக்கி–கூட காரியத்துக்கு வச்சிண்டேனா, இன்னும் கொஞ்ச நாள் ஒட்டுவேன்!

சுந்தரம் அய்யர்: (சீறிக்கொண்டு) என்னடி சொல்கிறாய்?

மீனாட்சி: (மனஸ்தாபத்துடன்) என்னத்தெ சொல்றேன் புதுசா? நாளக்கி (மழுப்பிக்கொண்டு) பரியாரி முருகனெ இருட்டோடே வரச் சொல்லிருக்கு.

சுந்தரம் அய்யர்: (ஆச்சரியத்தில் பேச்சற்றுப்போய்) என்ன? மீனாட்சி: என்ன சேறது? நாம் பண்ணின பாவம் இப்படியெல்லாம் செஞ்சு பார்க்கவேண்டிருக்கு... கண்ணா வளத்து.... (கண்ணைத் துடைத்துக்கொண்டு விக்கலுடன்) என்னிக்கானாலும் சேஞ்சுதானே ஆகணும்! நெனச்சிக் கிண்டேன்னாக்க வயறு பகீல்ங்கறது. இன்னிக்கி சாதமே செல்லல்லே.

சுந்தரம் அய்யர்: (திக்பிரமையடைந்து, கொஞ்ச நேரம் கழித்து மறுபடியும்): என்னடீ சொல்லுகிறாய்?

மீனாட்சி: (ஆத்திரத்துடன்) என் வாயாலே அதெ எத்தனெதரம் சொல்லணும்?

சுந்தரம் அய்யர்: (பிரக்ஞை வந்தவர் போல் தீர்மானமாக): என் உயிர் இருக்கிறவரையிலும், நீ சொல்லுகிறபடி, ஒன்றும், நடக்க முடியாது. தெரியும்?

(அவர் குரலிலிருந்து ஆவேசத்தைக் கண்டு மீனாட்சி கொஞ்சம் பயந்து போகிறாள்).... நீ என்ன கிராதகியாயிக்கிறாயே! பெற்ற குழந்தையை.

மீனாட்சி: (கோபத்துடன் குறுக்கிட்டு) போதும்! ஒங்களுக்கிருக்கிற வாஞ்சை எனக்கில்லே! நான் பெத்தேனா என்ன அவளே? அவளெ அப்படி செஞ்சு பார்த்தா என் மனசு குளுந்துகிண்டு தான் இருக்கும். (விம்முகிறாள்)

சுந்தரம் அய்யர்: பின் ஏன் அப்படிப் பேசுகிறாய்?

மீனாட்சி: நம்ப கஷ்டம் தானா பெரிது? லோகத்திலே நாலு பேர் என்ன சொல்லுவா? ஊருவாயெ மூடமுடியுமோ? நாளாக்கி, கொழந்தெக்கி, ஒரு பேர் வச்சூட்டாச்சு, அப்புறம் என்ன முட்டிண்டாலும் மாத்த முடியுமோ?

சுந்தரம் அய்யர்: (அழுத்தமாக) அதை எல்லாம் நான் லட்சியம் பண்ணப் போவதில்லை. கலியாணமே செஞ்சுட்டா அப்புறம் ஒருத்தரும் ஒண்ணுமே சொல்லமாட்டா?

மீனாட்சி: (திகிலுடன்) ஒத்தரும் நம்மாத்துக்கு அப்புறம் வரமாட்டா!

சுந்தரம் அய்யர்: நல்லதாச்சு! ஒத்தரும் வரவேண்டாம். யார் வந்து இப்பொழுது என் கண்மணிக்கு என்ன பிரயோஜனம்?

மீனாட்சி: அதென்ன பேச்சுன்னு பேசறேன்? இங்கே யார் என் தம்பிக்குப் பெண் கொடுப்பா?

சுந்தரம் அய்யர்: அதான் சொல்லிவிட்டேனே! அவன் பூஜை அவனோடே இருக்கட்டுமே! இங்கே அவன் வர வேண்டாம். என்னை வேண்டுமானால் ஜாதிப் பிரஷ்டம் செய்துவிடட்டும். நானும் ஒத்தராத்துக்குப் போகவில்லை!

மீனாட்சி: ஐயையோ! ஒங்களுக்கு ஆர் இப்படி துர்ப்போதனெ செஞ்சூட்டா?... எனக்கு அப்பவேத் தெரியும். இந்த டாக்டர் சிநேகம் ஏதோ விபரீதத்துக்குத்தான் வந்துருக்கூன்னு! நம்ம வம்சம். குலம் கோத்தரம்-எல்லாத்தையும் விட்டுட்டு வெள்ளக்காரர் மாதிரி-நன்னாருக்கு! சிவ சிவ! நெனச்சாக்கூட மகா பாவம்!

சுந்தரம் அய்யர் (சீறிக்கொண்டு): எது பாவம்!... நான் காமுவுக்கு கலியாணம் பண்ணி விடுகிறதென்று தீர்மானம் செய்துவிட்டேன். நீ அலங்கோலப்படுத்த வேண்டும் என்கிறாய்-எது பாவம்?.... அடாடா! உனக்கு என்னமாடி! வாயால் சொல்லக்கூட மனசு வருகிறது?.... கிளியாட்டமா குழந்தையை-

மீனாட்சி: ஆமாம், ஊரே மாஞ்சித்தான்போறது ராஜாத்தியாட்டமா காமுவெ இதுக்குத்தானா, அம்மாமி, சீரும் செனத்தியுமா கொடுத்தேள் என்கறா. நாம் பண்ணின பாவத்துக்கு ஆர் என்ன சேவா?

சுந்தரம் அய்யர்: பாவமோ, புண்ணியமோ, இனிமேல் நான் எதற்கும் தயங்கப்போவதில்லை. ஊர் எக்கேடு கெட்டு வேண்டுமானாலும் போகட்டும். எனக்குக் கவலை இல்லை.

மீனாட்சி: நன்னாருக்கு! பித்ரு சாபம் பலிக்காதோ? தலைமுறை தலைமுறைக்கும் விடாதே! நாளைக்கி பயல் நன்னாயிருக்க வாண்டாமா? அவ தலெயெழுத்து! எவ்வளவோ ஜாதகம் பார்த்து சகுனம் பார்த்துத்தான் பண்ணித்து. அந்த பாழாய்ப் போனவன் இவ்வளவு அல்பாயுசுன்னு யார் கண்டா? எம்பாவத்தெக் கொட்டிக்கத்தான் பொறந்தான் போலேருக்கு! ஆனால், என் தம்பி அப்பவே சொன்னான். ஆலந்தூர் ஜோசியர் கொஞ்சம் செவ்வாய் தோஷமிருக்குன்னு சொன்னாராம்.

சுந்தரம் அய்யர்: அதற்குத் தகுந்தாற்போலே செவ்வாய் தோஷம் இருக்கிற ஜாதகமாத்தானே பார்த்து பண்ணினோம்... அதெல்லாம் பொய், பித்தலாட்டம்!.... இனிமேல் உன் பேச்சோ உன் மாமியார் பேச்சோ, ஒன்றும் என் காதில் ஏறாது. இது வரையில் நான் முட்டாள்தனமாக சும்மா இருந்துவிட்டேன். மகத்தான பாவம்! இனிமேல் அனாவசியமாக ஒரு நிமிஷம்கூட தாமதம் கூடாது!

மீனாட்சி: நீங்களும் ஒங்கப் பொண்ணும் ஊரெவிட்டு ஓடிப்போக வேண்டியதுதான்.

சுந்தரம் அய்யர்: போய்விடுகிறோமே! இந்த ஊர் என்ன சுவர்க்கமா?இதையும் இதன் ஞாபகத்தையும் ஒரு பாடாகத் தொலைத்துத் தலைமுழுகி விடுகிறேன். எனக்கும் என் குழந்தைக்கும் நல்ல காலம் பிறக்கும்.

மீனாட்சி: பெரியவர் ஊர்-வீடு வாசல், அக்கம் பக்கம் ஆபத்து சம்பவத்துக்கு.

சுந்தரம் அய்யர்: என் ஆபத்துக்குத்தான் அது உதவாதே! அது எனக்குப்பிரயோஜனமில்லை, வேண்டாம்!

மீனாட்சி: மீனாட்சி சந்நிதி....

சுந்தரம் அய்யர்: நீ சொல்லுகிற கோலத்தில் அப்பா! அவள் வெளியில் வருவதைவிட சாகலாம்-நான் சாகலம்.... நீ சாகலம்!

மீனாட்சி: நான் நாளக்கின்னு சொன்னதுதான் பிசகாப் போச்சு.

சுந்தரம் அய்யர்: என்னிக்கும் கிடையாது. தெரியுமா? ஜாக்கிரதை, சொல்லிவிட்டேன்!

மீனாட்சி: சரி சரி, உள்ளே வாங்கே! யாராவது கேட்டா சிரிக்கப்போறா!

(மீனாட்சி உள்ளே போகிறாள். சுந்தரமய்யரும் எழுந்து உள்ளே போகிறார்)

காமு, கூடத்தில், குப்புறப்படுத்துக்கொண்டு அழுது கொண்டிருக்கிறாள்.

அதைக்கண்டு சுந்தரம் அய்யர் பதறிப்போய்க் குழந்தையைச் சமாதானம் செய்ய ஓடுகிறார்.

அதே வீட்டு வாசல் திண்ணை, காலை எழு மணி.

சுந்தரம் அய்யர், திண்ணையில் படுத்துக்கொண்டிருந்தவர், படுக்கையில் எழுந்து உட்காருகிறார். மீனாட்சி கதவண்டை வந்து நிற்கிறாள்)

மீனாட்சி: பல் தேய்க்கிறது தானே! காபி ஆறிப்போறதே!

மீனாட்சி: காபி சாப்பிட்டுட்டு ஒங்க கோட்டை பிடிக்கிற யோசனை யெல்லாம் செய்யலாம் (போகிறாள்)

சுந்தரம் அய்யர்: (உரக்க) காமு!

(காமு எங்கோ கொல்லைப்புறம் இருந்ததால் காதில் படவில்லை. எதிர்வீட்டு வாசலில் டாக்டர் தினசரியும் கையுமாக நிற்கிறவர், சுந்தரமய்யரைப் பார்க்கிறார்).

டாக்டர்: என்ன சார், இன்னும் எழுந்திருக்கவில்லையா?

சுந்தரம் அய்யர்: ராத்திரி தூக்கமில்லை. கொஞ்சம் தாமசம்!

(பரியாரி முருகன் பதுங்கிய வண்ணம் மெதுவாக வந்து திண்ணை யோரத்தில்தெருவில் நிற்கிறான். அவனைப் பார்த்ததுமே சுந்தரம் அய்யர் உலுக்கி எழுகிறார். பிறகு சமாளித்துக்கொள்கிறார்)

சுந்தரம் அய்யர்: என்னடா முருகா? இன்னிக்கி பண்ணிக்கல்லே நான், நாளைக்கு வா!

முருகன் (இழுத்தவண்ணம்): அது சரிங்க-இன்னிக்கி வேலெ செஞ்ச காசு-

(சுந்தரம் அய்யர் அதைக் கேட்டதும் மூர்ச்சையாகிப் படுக்கையில் சாய்கிறார். அதைப் பார்த்துக்கொண்டிருந்த டாக்டர் ஓடி வருகிறார். அதே சமயம் காமுவும் மீனாட்சியும் உள்ளே இருந்து வருகிறார்கள்.

டாக்டர்: (காமுவைப் பார்த்து) சட்டென்று கொஞ்சம் ஜலம் கொண்டு வாங்கோம்மா!

(காமு டாக்டரைக் கண்டு உள்ளே நகர்ந்தவள் தகப்பனார் கிடந்த கோலத்தைக் கண்டு பதைத்துப் போகிறாள்)

காமு: (சுந்தரம் அய்யர் பக்கத்தில் படுக்கையில் வந்து உட்கார்ந்து கொண்டு): அப்பா, அப்பா! (அழுகிறாள்).

டாக்டர்: ஒன்றுமில்லை, அம்மா! பயப்பட வேண்டாம்!

காமு: (மெய் மறந்தவளாய் டாக்டர் முகத்தைப் பார்த்து) அப்பாவுக்கு என்ன? பிழைப்பாரா?

டாக்டர்: ஒன்றுமில்லை. மயக்கம். இதோ தெளிந்து விடும்! (சுந்தரம் அய்யர் கையிலிருந்த சீசாவொன்றைத் திறந்து காட்டுகிறார்).

மீனாட்சி: மீனாட்சி தாயே! என்ன குத்தம்டீ! அம்மா! காப்பாத்துடீ! சொன்னது தப்புதாண்டி!

காமு: அப்பா!

டாக்டர்: (காமுவைப் பார்த்து) ஒண்ணுமில்லை. இதோ எழுந்து விடுவார்.

(சுந்தரம் அய்யர் மெள்ளக் கண்ணைத் திறந்து பார்க்கிறார். காமு, தன் பக்கத்தில், முன்போலவே. இருப்பதைப் பார்த்து, நிம்மதி அடைகிறார். டாக்டரைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறார்)

டாக்டர்: ஒன்றுமில்லை. பயப்படாதேயுங்கள்! எபந்திரக்கிறீர்களா? தூக்கி உட்கார வைக்கட்டுமா?

சுந்தரம் அய்யர்: எழுந்திருக்கிறேன். தூக்கி விடுங்கள். காமு, நீயும் கூடப்பிடி. அம்மா! அப்பாடா! (உட்காருகிறார்).

முருகன்: சாமிக்கு என்ன அப்படி மயக்கம். வந்திருச்சு? பெரியம்மாவுக்கு தலெசெஞ்ச காசு கேட்டேன்... தடால்னு விழுந்துட்டாரு... அப்பா, பயந்தே போனேன்!

டாக்டர்: எப்படியிருக்கிறது?

சுந்தரம் அய்யர்: ஒன்றுமில்லை. டாக்டர் இது மாதிரி நீங்கள்தான் என் குழந்தைக்கும்உயிர் கொடுக்கணும்.

(டாக்டரைப் பார்த்து காமு திகைப்புடன் தலை குனிந்து கொள்கிறாள்.)

## ஏலத்தன்று

**(மதுரை** ஜில்லாவில், சிவகங்கை ஜமீன் எல்லை யோரத்தில் ஒரு கிராமத்தில் பின் வரும் சம்பவங்கள் நடக்கின்றன. அந்தக் கிராமம் கள்ள நாட்டைச் சேர்ந்தது. இந்த நாடகத்தில் சம்பந்தப்பட்ட முக்கிய பாத்திரங்கள் கள்ள ஜாதியினர். அவர்கள் மொத்தத்தில் ஐந்து பேர்தான். வீரணன் அம்பலம் குடும்பத் தலைவன்; கருப்பாயி அவன் பெண் சாதி; பேச்சி அவர்களுடைய மகள், பம்பையன், மருமகள், பேச்சியைக் கலியாணம் செய்து கொள்ள வேண்டியவன். வீரணனுக்கு சுமார் ஐம்பது வயது, கருப்பாயிக்கு நாற்பது வயது, பேச்சி பருவமடைந்த பெண்; பம்பையன் நல்ல வயது வந்த வாலிபன், இவர்களைத் தவிர ஆண்டி அம்பலம் என்று ஒருவர் நடுவில் வருகிறார்.

**ரி**வின்யூ இன்ஸ்பெக்டர், கணக்குப்பிள்ளை, கிராம முன்சீப், போலீஸ்காரன்; இந்த நான்கு சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

**வீ**ரணன் அம்பலம் பயிர் செய்து வந்த சொந்த நிலம் கிஸ்தி பாக்கிகாசு ஏலத்திற்கு வந்து விடுகிறது. வேறே வழி இல்லாமல் மனைவியின் நகையை விற்று ஏலத்தன்று கட்டிவிட வேண்டும் என்று தீர்மானிக்கிறான்.

**ஏ**லத்தேதியன்று மத்தியானம் நடந்த சம்பவங்கள் கீழே நடக்கின்றன.

**வீ**ரணன், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்-இருவர் குரலும் ஆழ்ந்த கனத்த குரல்கள், ஆண்டி குரலும் பம்மையன் குரலும் நடுத்தரம். வீரணன் நிறுத்தி சாவதானமாகவே பேசுவான். வயது சென்ற அசல் குடியானவனின் வலுவும் கம்பீரமும் அவன் குரலில் இருக்கின்றன.

**க**ளத்தில் பரப்பிக் கிடந்த தடலின்மேல் மாடுகளை ஓட்டி பேச்சி சூடடித்துக்கொண்டிருக்கிறாள். அவன் மாடுகளை அதட்டி ஓட்டும் சத்தம் நடு நடுவே கேட்டுக்கொண்டே இருக்கிறது. விட்டு விட்டு மாடோ, கன்றுக்குட்டியோ கத்தும் சத்தம்)

வீரணன்: ஏலா, ஏன் குத்திக்கிட்டு இருக்கே?

(புகையிலை எச்சிலைத் துப்பும் சத்தம்)

கருப்பாயி: ஏன்?

வீரணன்: நேரமாவல்லே கஞ்சித்தண்ணி குடிக்க, இப்போவே வெய்யில் பத்திக்கிட்டு எரியுதாயில்லயா?

கருப்பாயி: (பல்லைக் கடித்துக்கொண்டு) ஆமாம், ஒன்னெக் கட்டிக் கிட்டதுக்கு இந்தக் கஞ்சி வைக்கிறதையும் காவக்காக்கிறதையுந்தான் கண்டேன். பூச்சிக் கூடும் சரடும்தான் அப்பன் போட்டது மிஞ்சியிருந்துச்சு. அதுவும் ஒங்கண்ணெ உருத்திச்ச செட்டிக்கடைக்கும் போயிருச்சு சந்தோஷமாயிரு!

வீரணன்: (கோபத்துடன்) என்னாலா, பொச கெட்டத்தனமா பேசரே? இண்ணக்கி ஏலம். கிஸ்திப் பணம் இண்ணக்கிப் போடாட்டி காடல்லெ ஏலத்துலே போயிடும்!

கருப்பாயி: நெல்லே வித்துப் போடறது?

வீரணன்: நெல்ல வித்துட்டா? கஞ்சித்தண்ணி குடிக்கணுமில்லயா? இப்ப இருக்கிற வெலெக்கி நெல்லப் போட்டா முப்பது ரூவாகூட வராது. நாப்பது ரூவால்ல கட்டணம்? அத்தப்பாவி கணக்கான் போன வருஷம் ரூவா குடுக்கல்லேண்ணு இருவது ரூவா தண்டம் வச்சிட்டானே. ஏங்கிப் போய்த் தண்டத் தீர்வையாம்! அவதாரத் தண்ணித் தீர்வையாம்! சாமிதான் கேக்கணும் அவனெ.

(கணக்குப்பிள்ளை பின் பக்கமாகத் தலையாரியுடன் வருகிறான்)

கணக்குப்பிள்ளை: அம்பலக்காரரே! யாரெசாமி கேக்கணுங்கோ?

வீரணன்: (திடுக்கிட்டுத் திரும்பி) ஐய்யா வாங்க! நம் துன்பத்தைத் தானுங்க!

கணக்குப்பிள்ளை: (தலையாரியைப் பார்த்து) தலையாரி! அம்பலக்ரர் மரத்துலே பத்து எளநீ புடுங்குடா!

வீரணன்: (பல்லைக் காட்டிக்கெஞ்சி) உங்ககிட்டே சொல்றத்துக்கு என்னாங்க. கைலே காசே இல்லிங்க. இண்ணக்கி சந்தெக்கி அதைதான் வெட்டி அனுப்பணுமினு இருக்கேனுங்க.

கணக்குப்பிள்ளை: (கோபத்துடன்) ஓகோ! சரி சரி, இண்ணிக்கிப் பணம் போடாட்டி ஏலம் ஞாபகமிருக்கிறதா?

வீரணன்: (பணிவுடன்) இருக்குதுங்க.

கணக்குப்பிள்ளை: எப்படிப் போடப்போறே பாப்பம்!

(தலையாரியுடன் போகிறான்)

வீரணன்: (மனைவியைப் பார்த்து) அந்தப்பய எங்கேலா? சந்தக்கிப் போகச் சொல்லணும்.

கருப்பாயி: அவன் வெடியங்காட்டியுமே போயிட்டான்ல!

வீரண்ன்: நீயா அனுப்பினே?

கருப்பாயி: ஆமாம்.

வீரணன்: சரி, நீ போயி கஞ்சித்தண்ணி எடுத்துக்கிட்டு வா. அப்படியே, பணத்தெக் கூட எடுத்தாந்துரு. சட்டிலே போட்டு வச்சிருக்கேன். (உச்சி வானத்தைக் காட்டி) அந்நேரத்துக்கு நாட்டாமை வருவாரு தொலைச்சிடுவோம் பொக்குனுபோ?

கருப்பாயி: வவுத்தெரிஞ்ச காசு வெளங்குமா?

(போகிறாள்) வீரணன்: அம்மா பேச்சி! செத்தெ குந்திக்க?.... மாட்டெ அப்பாலே வெரட்டிவுடு. (மாட்டை விரட்டும் சத்தம்)

பேச்சி: ஆத்தா! என்ன வெயிலு! சீச்சு!

வீரணன்: அந்தப் பய எங்கிட்டே சொல்லிக்காமெ போயிருக்கிறான் பாரு!

பேச்சி: கருக்கல்லேயே போயிருச்சே!

(ஆண்டி அம்பலம் தன் வீட்டுக்குப் போகும் வழியில் சற்றுத் தூரத்தில் நின்றுகொண்டு வீரணனுடன் பேசுகிறான்)

ஆண்டி: ஏன்னா! (உரக்க) உங்க மவென் என்ன மேலூர் கரெலே திர்ரான்?

வீரணன்: (கர்வத்துடன்) சந்தெக்கி அனுப்புனேன்!

ஆண்டி: (உரக்க) அவனெ மருதெ கரெலே அல்ல கண்டேன்?

வீரணன்: (சந்தேகமில்லலாமல்) இல்லெ, இல்லெ!

ஆண்டி: (பிடிவாதமாக, உரக்க) ஆமாங்கரேன்!

நாங்கூட எங்ஙகெனடா போறென்னு கேட்டேனல்ல. மருதெக்கின்னு சொன்னானே!

பேச்சி: (பயந்த குரலில்) என்னா சொல்றது?

வீரணன் : (யோசித்துக் கொண்டே) பயலெ மருதெக் கரெலே கண்டாணாமல்ல! அங்ஙனெ ஏம் போறான்?

(கருப்பாயி பரபரப்புடன் ஓடி வருகிறாள்)

வீரணன்: (நிதானமாக) ஏன்னாங்கரேன்?

கருப்பாயி: (மூச்சுத் திணறிக்கொண்டு) உருவாய்க் காணமே?

வீரணன்: (ஒரு நிமிஷம் கலங்கி) காணாமா?

கருப்பாயி: (பதறிக்கொண்டு) ஊடெல்லாம் தேடிட்டேனே!

வீரணன்: (தீர்மானத்திற்கு வந்தவன் போல) இருக்காது!

கருப்பாயி: (பயந்த குரலில்) ஏன்?

வீரணன்: (நிதானமான குரலில்) அந்தப் பாவிப் பய எடுத்துக்கிட்டு ஓடிவிட்டான்!

கருப்பாயி: (உடனே ஒப்பாரிக் குரலில்) ஐயையோ! அருமாந்தமவென் போயித்தானே!

வீரணன்: (நிதானமாக குரலில்) அந்தப் பாவிப் பய எடுத்துக்கிட்டு ஓடிவிட்டான்!

கருப்பாயி: (உடனே ஒப்பாரிக் குரலில்) ஐயையோ! அருமாந்தவென் போயித்தானே!

வீரணன்: (திடீரென்று ஆவேசத்துடன்) பொழுது சாய, காடும் ஏலத்துலே  போயிடும்!

கருப்பாயி: (அவசரத்துடன்) சாவடிக்கு வாங்களேன், போவோம். எதுனாச்சும் தெரியும். ஐயோ, நான் என்ன பண்ணுவேன்!

வீரணன்: (தீர்மானமாகக் குரலில்) என்னாடி இப்ப தெரியல்லே! என்னாடி பண்ணக்கிடக்கு? அந்தப்பயெ வரட்டும் வெட்டிப் போட்டுர்றேன்! மவனா அவன்!

(கருப்பாயி வீரணனை பலாத்காரமாகப் பிடித்து இழுத்துக் கொண்டு போகிறாள். பம்பையன் தசரத ராஜகுமாரா! என்பதைக் கன்னா பின்னாவென்று இழுத்துக்கொண்டு வருகிறான். தூரத்தில் கொட்டு தப்படை சத்தம். சிலர் உரக்கச் சண்டையிடும் சத்தம்)

பேச்சி: (சலித்துக்கொண்டு) என்ன பாட்டுங்கிறேன்?

பம்பையன்: (சட்டென்று நிறுத்தி) ஏன்?

பேச்சி: அண்ணெ உருவாயெ எடுத்துக்கிட்டு ஓடிப் போயிருச்சால்லியா?

பம்பையன்: (பரபரப்பின்றி)ஆமாம்!

பேச்சி: ஆத்தா மவெனுக்கு அளுவுது, அப்பச்சி காட்டுக்கு அளுகுது! இண்ணக்கி ஏலம், ஒருத்தரும் கஞ்சி குடிக்கல்லே!

பம்பையன்: (சாவதானமாக) ஏலம்ண்டா என்ன? யாராச்சியும் எடுத்துக்கிட்டுப் போவட்டுமே! நெலத்தே நாமதானே உளுவணும்? வாரக்குத்தவெ தானே குடுக்கணும்? கிய்த்திக்கும் குத்தவெய்க்கும் சரியாய்ப் போச்சு! எவன் நம்மெ நெலத்தெவுட்டுப் போச் சொல்றது?

பேச்சி: வாங்கிறவங்க?

பம்பையன்: அவுங்களுக்கு யார் உளுதா என்ன? வாரம்தானே?

பேச்சி: நாடு நம்மெவுட்டுப் போயிடுமால்லியா?

பம்பையன்: நாம்பவுட்டாத்தானே? எவன் கிட்ட வர்ரான் பாப்பமே!

பேச்சி: அப்பெங்கிட்ட அப்படிச்சொல்லித் தகிரியம் சொல்லேன்!

பம்பையன்: ஆவட்டும்! (தன் மடியிலிருந்து சில சாமான்களை எடுத்து, முதலில் அவள் கையில் சோப்பைக் கொடுத்து) இந்தா, இதென்ன தெரியுமா?

பேச்சி: (ஆச்சரியத்துடன்) இதென்ன ரொட்டிகணாக்கா இருக்கு.

பம்பையன்: (அவளுடைய பேதமைக்கு இரங்கியவனாக சோப்பு! தெரியாது?

பேச்சி: (மோந்து பார்த்து) இதென்னமோ மணக்குதே?

பம்பையன்: (திருப்தியுடன்) ஆமாம்! அதெத்தேச்சிக் குளிக்கிறது!

பேச்சி: மஞ்சக்கணக்கா கல்லுலேயே?

பம்பையன்: இல்லேங்கறேன்! கையிலேங்கறேன்! கையிலே தண்ணிவுட்டு தேச்சாபூந்திக் கொட்டேபோலே நொரெ வரும். அதே ஒடம்புலே தேச்சிகிட்டு முளுவனா பளபளாண்டு இருக்கும். ஒடம்பு மணக்கும்! இந்தா, இதென்னா தெரியுமா? (ஒரு தைல சீசாவை நீட்டுகிறான்)

பேச்சி: இதென்னா வேப்பெண்ணையா?

பம்பையன்: வாசனெத்தயிலம், தலைலே தடவிச் சீவி முடிஞ்சுட்டா- (சிரிக்கிறான்).

பேச்சி: (வெட்கத்துடன்) போங்கறேன்!

பம்பையன்: (இந்தா! (ஒரு வெள்ளை ரவிக்கையைக் கொடுக்கிறான்)

பேச்சி: இதென்னா? ஒம் பனியன்போலே இருக்குதே!

பம்பையன்: அதான்லா லவுக்கே! பட்டணக்கரெலே பொம்புள்ளெங்க போட்டக்கிறாங்களே அதுதான்!

பேச்சி: ஆத்தாடி! அது வாண்டாம் எனக்கு! போட்டுக்கிற வெக்கமாக இருக்கும். ஆத்தா ஏதுடிங்கும்! அல்லோரும் ஏசுவாங்க. இதெல்லாம் கூட கூரையிலே ஒளிச்சு வக்கெணும்.

(வீரணன், ஏ-ர-பம்பையோ! .... என்று உரக்கக் கூவிக் கொண்டு வருகிறான். கருப்பாயி அழுதுகொண்டே பின்னால் வருகிறாள்)

பம்பையன்: இந்த இருக்குறேனல்ல!

வீரணன்: இங்ஙனெதான் இருக்கறயா? சேதி தெரியுமா ஒனக்கு?

பம்பையன்: (சாதாரணமாக) ஆமாம். வீரணன்: கொலகாரப்பய பணத்தெ எடுத்துகிட்டு ஓடிப்பூட்டான்! ஆயுருச்சு! கொஞ்ச நேரத்துக்கெல்லாம் நெலம் ஏலத்துலே போயிடும்!

பம்பையன்: போகட்டுமே, மாடா, உளுகிற நெலம் நம்முது தானே! வாங்கறவனுக்குக் குத்தவெத்தானே? அதெ நாம் கொடுத்திடுவோம். நாம இப்போ கொடுக்கிற கிஸ்திக்கும்தண்டத்துக்கும் மேலே போவாது அது நெலம் நம்மகிட்டத்தானே இருக்கு! ஏலந்தான் போட்டுமே!

வீரணன்: போடா, பொச கெட்டவனே! வீரணன் நெலம் ஏலத்துலே போயிருமோ? (மீசையை முறுக்கினான்)

பம்பையன்: என்ன பண்ணப் போரே?

வீரணன்: என்ன பண்ணப்போரேனா! நான் யாருண்ணு தெரியாமல்ல பேசறே நீ! மந்தெலே கூட்டம் போட்டு கட்டுப்பாடு பண்ணிடரேன்! அப்புறம் எவன் ஏலம் எடுப்பான்?

பம்பையன்: பூ! சர்க்காரே எடுத்துகிராக/- தொரையம்பலம் நெலத்துப்போல. பயிரேத்தினா தெண்டம் போடுவாக, அது இப்பதரிசாத்தானே கிடக்கு!

வீரணன்: தெண்டம் குடுக்காட்டி?
(போலீஸ்காரர் வருகிறார்)
போலீஸ்: என்ன வீரணன்?
வீரணன்: (நடுங்கி) அய்யா வாங்க!
போலீஸ்: உம்மவன் ராச்சான் எங்கே?
வீரணன்: ஏங்க?
போலீஸ்: அவனைப் புடிச்சிகிட்டுப் போவணும்.
வீரணன்: (வீராப்புடன்) அவன் ஓடிப்பேயித்தானுங்களே!
போலீஸ்: அந்தப் பேச்செல்லாம் நடக்காது.
வீரணன்: தேடிப்பாத்துக்கோங்க. வூட்லே பணங்கூட திருடிக்கிட்டுப் போயித்தானுங்க. ஆமாம் எதுக்குங்க அவனெ
போலீஸ்: பெரியம்பலக்காரர் மவன் காத்தானெக் குத்திவிட்டான்.
வீரணன்: எப்படிங்க?
போலீஸ்: உன் சொந்தத்துலே சிட்டாள்னு பொண் இருக்கா?
வீரணன்: இருக்குங்க. எம்மவனுக்குக் கட்ரதுங்க.
போலீஸ்: காத்தான் தீண்டிவுட்டானாம், அதற்காக
வீரணன்: எம்மவன் அவனெ கொனுட்டானா-இருக்காதுங்க.
போலீஸ்: உம் மகன் இங்கே நிச்சயமாக இல்லையா?
வீரணன்: இல்லைங்க. இருந்தா ஏலா கருப்பாயி உம் மவனெ தேடிக்கிட்டு வந்திருக்காரு. நீ போயேன் உம் மவனுக்குப்பதலா?
(போலீஸ்காரர்போகிறார்)
அஹ்ஹஹ்ஹ ஹா நல்ல கதெங்கறேன் நல்ல மவன் நல்ல பொஞ்சாதி புள்ளே ஏ.கருப்பாயி?
கருப்பாயி: (பயந்து) ஏன்?
வீரணன்: நீ தீத்துகிட்டுப் போயிரு ஏ, பம்பையா?
பம்பையன்: என்னா?
வீரணன்: இந்த வூட்டெயும் பேச்சியையும் நீ வச்சிக்க, காட்டுலே நான் இருக்கிறேன். என்னெக் கடத்திட்டு எவனாச்சியும் காட்டெக்கட்டிகிட்டுப் போவட்டும்.
(ரிவின்யு இன்ஸ்பெக்டர், கணக்குப்பிள்ளை, முனிசீபு வருகிறார்கள்)
ரிவின்யூ இன்ஸ்பெக்டர்: என்ன முனிசீப் பணம் வருகிறதா? இல்லையா, கேள்! ஏலம் போட வேண்டியது தானே?
வீரணன்: (கோபத்துடன்) ஏஞ்சாமி, ஏலம்போட மட்டும் வாரீங்களே. இந்தக் கணக்கன் போட்டதெண்டம் நாயமான்னு விசாரிச்சிங்களா?
ரிவின்யு இன்ஸ்பெக்டர்: யாரடா இவன் முட்டாள்? பணம் வருகிறதா, இல்லையா?
வீரணன்: (வெறிபிடித்தவன்போல திடீரென்று) பணமுமில்லை. கிணமுமில்லே, பணம் கிடையாது?
ரிவின்யூ இன்ஸ்பெக்டர்: அவனுக்குபைத்தியம் போலிருக்கிறது, ஏலம் போடுவோம். காவடிக்குப் போகலாமா, முனிசீப்?
வீரணன்: (பல்லைக் கடித்து உரக்க) ஏலமா? யார் நெலத்தெ யார் ஏலம் போடறது? (இன்ஸ்பெக்டரைத் தாக்குகிறான்)
(அடி சத்தம் கேட்கிறது. முனுசீப்பும் கணக்குப் பிள்ளையும் அடேடே ஏய், தலையாரி, போலீஸ் போலீஸ் என்று சத்தம் போடுகிறார்கள். போலீஸ்காரர் வருகிறார்)
ரிவின்யூ இன்ஸ்பெக்டர்: கான்ஸ்டபிள் இவனைக் கைது செய்து ஸ்டேஷனுக்குக் கொண்டு போ, சர்க்கார் உத்தியோகஸ்தனைத் தாக்குகிறான்.
(போலீஸ்காரர்கள் வீரணனை இழுக்கிறார்கள்)
வீரணன்: (திமிறி) விடய்யா; எம்மூச்சு இருக்கிறப்ப என் நெலத்தெ எவன் ஏலம் போடறது பார்க்கறேன்.
(போலீஸ்காரர் வீரணனை இழுத்துக்கொண்டு போகிறார். வீரணன் விடய்யா, விடய்யாங்கறேன். தூ நீ மனிசனா?

என்று கத்திக்கொண்டே போகிறான்)

பம்பையன்: வாங்க. மாமன் பின்னோடே போவோம்?

(கருப்பாயி, பேச்சி, பம்பையன் போகிறார்கள்)

ரிவின்யூ இன்ஸ்பெக்டர்: முனிசீப், ஏலம் போடலாமா?

முனிசீப்: ஒருத்தரும் வர்லீங்க. பாருங்க. சர்க்காருக்குத்தான் இந்தநெலத்த எடுத்துக்கனும்.

ரிவின்யூ இன்ஸ்பெக்டர்: இது முன்னாடியே சொல்லித்தொலைக்கக் கூடாதா? இவ்வளவு ரகளையாக வேண்டாமே? முட்டாள் சிப்பந்திகளைக் கட்டிக்கொண்டு அழவேண்டியிருக்கிறது. சரி, வந்து தொலையுங்கள்.

(போகிறார்கள்)

(அருகில் துப்பும் சத்தம், தூரத்தில் ஜனங்கள் கூப்பாடு போடும்.

## ஸத்யவ்ரததனும் ஸத்யவதியும்

**(கங்கா** தீரத்தில் ஒரு செம்படவன் குடிசை. செம்படவன் மகள் ஸத்யவதி, குடிசை வாசலில் ஒரு மரத்தடியில் மீன் பிடிக்கும் வலை நெய்து கொண்டு ஏதோ ஒரு பாட்டை மெல்லப் பாடிக்கொண்டிருக்கிறாள்.

அவளுடைய வயது சுமார் பதினாறு. செம்படவ குலத்திற்கு அபூர்வமான அங்கஸௌந்தர்யம் பெற்றவள். ஆபரணங்களற்றுப் பிறந்தமேனி வனப்புடன் இருக்கிறாள், அவள் ஆடைகூட முழங்கால் வரைதான் இருக்கிறது.

ஸந்தனு மஹாராஜனின் புதல்வன் இளவரசன் ஸத்யவ்ரதன், வேட்டையாட வந்தவன் அவ்வழியே வர நேரிடுகிறது. அந்த வன நிழலில் ஸ்யோதிர்லதை போல ஜ்வலித்துக்கொண்டு தன் அழகையே தான் அறியாமல் உட்கார்ந்திருந்த பாவையைக் கண்டு பிரமிப்பும் ஆனந்தமும் கொள்கிறான் ராஜகுமாரன்)

ஸத்யவ்ரதன்: ஸுலோசனே! நீ யார். சிப்பியில் முத்துப்போல இக்குடிசையில் வஸிக்கிறாய்?

ஸத்யவதி: (நாணத்துடன் எழுந்து நின்று பூமியையும் அவனையும் மாறிமாறிப் பார்த்த வண்ணம்) வரவேண்டும், நான் இக்குடிசையின் யஜமானன் மகள், உட்காரவேண்டும். நான் தங்களுக்கு அதிதிஸத்காரம் செய்ய அர்ஹதையுள்ளவள் அல்ல.

ஸத்யவ்ரதன்: (ஆச்சர்யத்துடன்) ஏன் அப்படிச்சொல்கிறாய்?

ஸத்யவதி: (மந்தஹாஸத்துடன்) நீங்கள் ராஜபுத்ரன் என்று தங்கள் அங்க அடையாளங்களால் தெரிகிறது. நான் தான் ஒரு செம்படவன் மகள்.

ஸத்யவ்ரதன்: (சுருக்கமாக) உன்ஸௌந்தர்யத்திலிருந்து நீ ஒரு ராஜபுத்திரனுக்கு இணையாகக் கூடியவள் என்று எனக்குத் தெரிகிறது. இவ்வளவு தைர்யமாகப் பேசுவதற்காக என்னை மன்னி, பரிமளகந்தி!

ஸத்யவதி: (சாதுர்யமாக சில புஷ்பங்கள் எவ்வளவு அழகாயிருந்தபோதிலும் தேவதார்ச்சனைக்கு உபயோகமில்லை. நீங்கள் அறியாததா?

ஸத்யவ்ரதன்: பெண்ணே! நீ ராஜ கிருஹத்தில் வளரய வேண்டிய கொடி; இவ்வனத்தில் இருக்கக்கூடாது!

ஸத்யவதி: (சிரித்துக்கொண்டு) வனலதைகள் அரண்மனை உத்யான வனங்களில் செழிக்கா-மெலிந்து கருகும்-என்ன செய்கிறது?

ஸத்யவ்ரதன்: ஸர்வ ஜாக்ரதையுடன் போஷித்தால்?

ஸத்யவதி: (வ்யஸனக்குறியுடன்) எப்படி முடியும்? மண்மாறுமோ?

ஸத்யவ்ரதன்:அலங்காரமாகப் பேசுகிறாய். மண் என்பதால் எதைக் குறிக்கின்றாய்?

ஸத்யவதி: (புன்னகையுடன்) ராஜகுமாரா! தங்களை நிறுத்தி வைத்து இப்படிப் பசே நான் அர்ஹதை அற்றவள். அந்த மேடையில் உட்கார வேண்டும்.

ஸத்யவ்ரதன்: (திடீரென்று தீர்மானமாக) உன் அனராகமாகிய உன்னத ஆஸனத்தில் அமர நான் இச்சை கொண்டுவிட்டேன்.

ஸத்யவதி: (விஷாதத்துடன்) ப்ரபோ! அந்த இடம் தங்கள் சுமையைத் தாங்கத் தகுதியற்றது.

ஸத்யவ்ரதன்: (ஆவலுடன்) ஆனால் அந்த ஆஸனம் எனக்குண்டா?

ஸத்யவதி: (முகம் விழுந்து) அதைச் சொல்லி என்ன பயன்?

ஸத்யவ்ரதன்: (ஸந்தோஷத்துடன்) ஸுந்தரி! உன் இங்கிதத்தைக் கண்டு நான் ஆச்சர்யமும் ஆனந்தமும் அடைகிறேன். நீ தான் எனக்குற்றவள்.

ஸத்யவதி: (பயந்து) அல்ல, அல்ல, அக்னிக்கு ஹவிஸ் அளிக்க வேண்டும், புஷ்பம் பொசுங்கிப்போகும்.

ஸத்யவ்ரதன்: நீ அக்னிக்கு மீறிய தாரகை. பெண்ணே, ஏன் இப்படி தர்க்கம் செய்து ஏன் ப்ரேமையை பரிசோதிக்கிறாய்? ஏன் என்னை நம்பமாட்டேன் என்கிறாய்? உனக்கு என்ன உறுதி வேண்டும்; சொல் தருகிறேன்!

ஸத்யவதி: (கண்களில் நீர் ததும்ப) உங்களை மறுக்கத்தான் எனக்கு இப்பொழுது உறுதி தேவை.

ஸத்யவ்ரதன்: (பொறுமையற்று) என்? எதற்காக?

ஸத்யவதி: நான் ராஜ வம்சத்தில் பிறந்தவளல்ல.

ஸத்யவ்ரதன்: அதனாலென்ன? தாமரை தருமீது இருக்க வேண்டுமென்று அவசியம் உண்டா?

ஸத்யவதி: வலையைப் பின்னும் நான் அரண்மனையில் வந்து என்ன செய்கிறது!

ஸத்யவ்ரதன்: (சிரித்துக்கொண்டு) என் மனதை வலைபோட்டு இழுத்துவிட்டாய். அதில் சதுரையல்லவா? நாட்டின்

அன்பை வலை போட்டு அடைய எனக்கு உதவு செய்!

ஸத்யவதி: (தீனமாக)சக்தி வேண்டாமா?

ஸத்யவ்ரதன்: நீ தான் சக்தி ஸ்வரூப மாயிற்றே?

ஸத்யவதி: (சந்தோஷத்துடன்) கார்யத்தை சாதித்துக்கொள்வதில் ராஜகுமாரர்கள் எப்பொழுதும் பெயர் போனவர்களோ?

ஸத்யவ்ரதன்: வீண்பழி! (ஸத்யவதியின் கையைப் பற்ற நெருங்குகிறான். செம்படவன் வருகிறான்.)

ஸத்யவதி: (தந்தையைப் பார்த்துச் சமாளித்துக்கொண்டு) ராஜகுமாரனை வரவேற்க வழிதெரியாமல் தவிக்கிறேன்.

செம்பவடன்: (ராஜகுமாரனைப் பார்த்துக்கொண்டு)) ஆ,ஸந்தனு ராஜரின் குமாரனா? அவர் உன் குமாரன்! அவரை வரவேற்பதில் உனக்கு ஸங்கோஜம் வேண்டியதில்லை!

ஸத்யவதி: (திடுக்கிட்டு) என்ன?

ஸத்யவ்ரதன்: (பிரமித்து) என்ன?

செம்படவன்: (அதிருப்தியுடன்) ஸத்வதி, நீ உத்தம ஸ்திரீ என்று நினைத்தேன், ஸந்தனு மஹாராஜன் உன் கணவர் என்று நான் சொல்வதில் உனக்கென்ன அதிருப்தி?

ஸத்யவதி: (தன்வசமற்று) இவர்-ஸத்யவ்ரதன்-என்-குமாரனா? எப்பொழுது முதல்?

செம்படவன்: நேற்று முதல்! ஸந்தனு மஹாராஜன் உன்னை மணக்க விரும்புகிறார். உன்னை அருக்குக் கொடுப்பதாக வாக்களித்துவிட்டேன்!

ஸத்யவ்ரதன்: (ஸ்தம்பித்துப்போய்) ஹா!

ஸத்யவதி: (பிதற்றுபவள்போல) ஸத்யவ்ரன்-என் புத்ரனா? அதெப்படி முடியும் என் மனது-

ஸத்யவ்ரதன்: (திடீரென்று உறுதியுடன்) அன்னையே நமஸ்கரிக்கின்றேன்!

ஸத்யவதி: (மெய்மறந்து ஆவேசத்துடன்) அன்னையா! என் மாத்ருத்வம் பாழாய்ப்போக! இல்லை! ஸத்யவ்ரத!-

ஸத்யவ்ரதன்: (தீர்மானமாக) அம்மா, ஆசீர்வாதம் செய்!

செம்படவன்: (நிலைமையை அறிந்தவனாய்) ஹதாகர்களே!

ஸத்யவ்ரதன்: (நிதானமாக) ஆமாம்! என் ஆசை இப்பொழுது பிறந்து, பிறந்த நிமிஷமே ஹதமாய்விட்டது!

ஸத்யவதி: (ஏக்கத்துடன்) உண்மையாகவா?

ஸத்யவ்ரதன்: (பிரதிக்ஞை செய்பவன்போல) இது ஸத்யம்! இனி என் மனதில் பெண் ஆசை இல்லை!

ஸத்யவதி: (பயந்து) உங்கள் சபதம் கொடியது; பீஷ்ம! இன்னும் உலகில் ஸர்வாங்க ஸுந்தரிகள் இருக்கிறார்கள்!

ஸத்யவ்ரதன்: பயனென்ன? இருந்தால்-?

ஸத்யவதி: நீங்கள் யுவா-

ஸத்யவ்ரதன்: என் யௌவனத்தில் இனி உயிரில்லயே!

ஸத்யவதி: (கவனிக்காமல்) உலகமும் நித்ய யௌவனமூட்டும் அம்ருதக் களஞ்சியம்!

ஸத்யவ்ரதன்: அது உனக்கு ஸுகம் அளிக்கட்டுமென்று மனமாற ஆசீர்வதிக்கிறேன்- வேண்டுகிறேன்! உன் புத்ர பௌத்ரார்கள் ஸௌபாக்யம் பெறட்டும்! ராஜ்யபதவி கொள்ளட்டும்!

ஸத்யவதி: நீங்கள்

ஸத்யவ்ரதன்: நானா? என்னைப் பற்றி இனிமேல் என்ன! நான் ஸத்யவ்ரதனல்லவா? இன்று கொண்ட பிரம்மசர்ய உறுதியில் உயிரை விடுவேன்!

ஸத்யவதி: அல்ல, சரியல்ல! நீங்கள் ராஜ்யம் பெற வேண்டும்!

ஸத்யவ்ரதன்: உன் குமாரன் பெறவேண்டியது நியாயம்.

ஸத்யவதி: (கண்ணீருடன் உருகி) ராஜகுமார! குமார! தாயாரின் ஆசீர்வாதத்தைப் பெறுங்கள்! நித்ய யௌவனம் கொண்ட கீர்த்தியை மணமகளாகப் பெற்று சிரஞ்சீவி ஸுகத்தைப் பெறுக!

**மின்னக்கலை**

**(பத்மநாபன்** சாய்வு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு பல்லைக் குத்திக்கொண்டிருக்கிறான். பவானி அரிக்கன் லைட் கிளாசை எடுத்துத் துடைத்துக்கொண்டிருக்கிறாள். கை அதற்குள் நுழையாமல், சிரமப்பட்டு, நுழைந்து விடுகிறாள். பிறகு அது எடுக்க வரமாட்டேனென்கிறது. சிரமப்படுகிறாள். பத்நாபனைப் பார்க்கிறாள். அவன் அவளைப் பார்க்க மாட்டேனென்கிறான்-விஷயம் அவனுக்குத் தெரியும்.)

பவானி: ஐயோ, இந்த அரிக்கன் விளக்கு! துடைக்கவே வருகிறதில்லை. இது வேண்டாம்னா, கேட்டால்தானே!

பத்மநாபன்: (புரளியாக) இருக்கட்டும், இருக்கட்டும். நம்மாத்திலே, எலக்டிரிக் லைட் போடுகிறவரைக்கும் இதுதான் இருந்து விட்டுப்போகட்டுமே!

பவானி: (கோபமாய்) புரளியைப் பாரு, புரளியை! எலக்டிரிக் லைட் என்னத்திற்கு? சிம்ணி வாங்கி வைங்கோ! இஞ்சின் மாதிரி புகையுமே, சின்ன இஞ்சின்!

பத்மநாபன்: அந்த இஞ்சின் வாங்கறத்துக்குக்கூட இப்பக் காசு கிடையாது! பலசரக்குக் கடைக்காரனுக்கு பதிமூன்று ரூபாய் கொடுக்கணும். அந்த சங்கரன் பயல் கிட்டே ரெண்டு ரூபாய் வாங்கி இருந்தேன். அவன் நாலுதரம் வந்துட்டுப்போயிட்டான்!

பவானி: எல்லாம் பட்டால்தான் தெரியும்! பணத்தைக் கடன் வாங்கியாவது அவகிட்டே கொண்டுபோய் அழுகிறபோது....!

பத்மநாபன்: (பொய்க்கோபத்துடன்) சீச்சீ! கழுதை! என்ன வர வர வாய் ஜாஸ்தியாகிறது!

பவானி: ஏன் முகத்திலே அசடு வழியறது? கஷ்டம்! கஷ்டம்! தலை எழுத்து!

பத்மநாபன்: (கனிந்து) பவானி, ஏன் இப்படி எல்லாம் அபாண்டத்தைச் சொல்லுகிறாய்?

பவானி: ஆம்! அதனாலென்ன?

பத்மநாபன்: அதனால் ஒன்றுமில்லை! கடைசியில் நீயாகத்தானே அவளைப் போகவும் சொன்னது? ஒரு வருஷமாகியும் அவளையே ஏன் தூஷித்துக்கொண்டிருக்கிறாய்?

பவானி: மின்னகலையைச் சொன்னால் வழிகிற கோபத்தைப் பார்!... த் சொத் சொ? என்ன ஒற்றுமை...

பத்மநாபன்: நீயாக ஏதேனும் ஒன்றுக்கு, மூக்கும் காதும் வைத்துக் கட்டிவிட்டால்... (கோவில் மணி அடிக்கிறது)

பவானி: ஐயோ-அம்மா! இந்த வீட்டில் போராடுகிறதுக்குத்தான் பொழுது சரியாக இருக்கு! தீபாராதனைக்குக் கூடப்போக முடிகிறதில்லை... கோவிலுக்குப் போயிட்டுவரேன்... (போகிறாள்.)

பத்மநாபன்: மின்னக்கலை போய் எத்தனை நாளாகிறது! அவள் மண்டையைப் போட்டு இன்னம் இவள் உருட்டிக்.... (பின்பக்க வாசலில் கதவு தட்டும் சப்தம்)

பத்மநாபன்: யாரது?

குரல்: நான்தான்...

பத்மநாபன்: (ஆச்சரியத்தில்) ஆ! யார்... மின்னக்கலையா... ஓடிப்போய் கதவைத் திறக்கிறான்)

மின்னக்கலை... மின்னக்கலை...

(ஆசையும் ஆர்வமும் தோன்ற ஏதேனும் அகப்பட்டதா மின்னக்கலை?...

மின்னக்கலை: இல்லையே, நீங்கள்தான்..

பத்மநாபன்: மின்னக்கலை! என்ன நீ கூடவா இப்படிப் பேச வேண்டும்? உனக்குத் தெரியாதா! இவள் இருக்கிறவரைக்கும்...

மின்னக்கலை: இல்லை, இல்லை அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அதற்காக நீங்கள் பவானியம்மாளை ஒன்றுமே சொல்லக்வடாது, எனக்கு எங்கேயும் வேலையகப்படாவிட்டால் என்ன...

பத்மநாபன்: ஐயோ, உனக்கிருக்கும் அந்த புத்திகூட இவளுக்கு இல்லையே! ஒரு வருஷத்தில் ஒரு நாளாவது இந்தப் பக்கம் நீ வரக்கூடாதா? மின்னக்கலை: .......

பத்மநாபன்: ஏன்? என்ன? இந்த மௌனத்தின் அர்த்தமென்ன, மின்னக்கலை?

மின்னக்கலை: நான் இங்கேயே, இந்த ஊரிலேயே இல்லை! பத்மநாபன்: (அர்த்தமே ஆகாதது போல்)... என்ன? அப்பொழுதே நீ....

மின்னக்கலை: (தலையைக் குனிந்துகொண்டு) ஆம்! கஷ்டம் தாங்கமுடியாமல் போய்விட்டது! பைத்தியம்

பிடித்தமாதிரி...

பத்மநாபன்: இரு, இரு! என்ன இப்படி! கண்ணில் ஏன் நீர் கலங்குகிறது?

மின்னக்கலை: (தன்னையும் மீறி) ஆம்! எனக்கு வேறு கதி? இங்கே இருந்த குடிசையும் போனபிறகு எனக்கு இருக்க இடமேது?

பத்மநாபன்: நீ அதில் இருக்கக்கூடாதென்று சொல்லிவிட்டானா?

மின்னக்கலை: ஆம், அன்றைக்கே புறப்பட்டு விட்டேன். அதற்குப் பிறகுதான் என்னுடைய..

(தூரத்தில் அழுகிறது திரும்பிப் பார்க்கிறாள்)

பத்மநாபன்: யாரது-குழந்தை?

பத்மநாபன்: என்ன... என்ன... மின்னக்கலை நான் அதைப்பார்க்க வேண்டும், பார்க்கட்டுமா...

மின்னக்கலை: நான் போய்க்கொண்டுவருகிறேன்.

(ஓடுகிறாள்)

பத்மநாபன்: சீ! நான் நன்றியற்றவன். என் தலைக்குமேலே தொங்கிகொண்டிருந்த பாரத்தை எவ்வளவு சுலபமாகத் தூரவிலக்கிவிட்டேன்!

(மின்னக்கலை மௌனமாய்த் தனது குழந்தையை பத்மநாபனிடம் கொடுக்கிறாள்)

பத்மநாபன்: (ஆசையாக) இதுவா....

மின்னக்கலை: (செல்வமாக) முகத்தைப் பார்த்துக்கூடத் தெரியவில்லை போலிருக்கு!

பத்மநாபன்: ஐயோ, இதன் அதிர்ஷ்டம், குடிசையில் பிறக்க வேண்டுமென்று இருந்தது!

மின்னக்கலை: இல்லை. அது குடிசையில்கூட பிறக்கவில்லை!

பத்மநாபன்: இல்லையா!

மின்னக்கலை: இல்லை. வெகுதூரத்தில்! பாம்பாற்றின் கரையில் அரச மரத்தடியில்!

பத்மநாபன்: இது என்ன? (கண்ணீர் தளும்புகிறது, அழுத்தமாய்... நிதானமாய்) ஆம். ஏன் இருக்க முடியாது? என்னுடைய கல்நெஞ்சு அதை அறிந்துகொள்ள முடியாவிட்டால், அது முடியாததா?

மின்னக்கலை: கடைசியில் உங்களிடமே வந்துவிட்டேன். வேண்டாம்-கூடாது என்றுதான் முதலில் எண்ணினேன்... ஆனால் இது... இந்தக் குழந்தை...

பத்மநாபன்: நிச்சயம். என்னுடையது. என்னிடம்தான் வரவேண்டும்-அப்பா! என்ன குளிர்!-ஆனால்...

மின்னக்கலை: ஆனால், என்ன?

பத்மநாபன்: ஒன்றுமில்லை.

மின்னக்கலை: என்ன ஒன்றுமில்லை?

பத்மநாபன்: ம்ம்... பவானி?

மின்னக்கலை: ... .... ....

பத்மநாபன்: என்ன பேசாமலிருக்கிறாய்-மின்னக்கலை!

மின்னக்கலை: உண்மை! பேசுவதற்கு என்ன இருக்கிறது?

பத்மநாபன்: உனக்குத் தெரிகிறதா-அவள் வந்தால்... பவானி வந்தால்... நான்....

மின்னக்கலை: ஆம்- (வெளியில் பார்க்கிறான். பலமாகத் தூறல் போடுகிறது)-சரி

பத்மநாபன்: மின்னக்கலை! எங்கே போகிறாய்? மழை, வெளியில்! இரு.

மின்னக்கலை: பவானியம்மாள் வந்து விடலாம்.... அதோ (வாசலில் கதவு தட்டும் சத்தம் கேட்கிறது. மின்னக்கலை ஓடி விடுகிறாள்)

பவானி: அடேயப்பா! என்ன இழவு மழை அகாலத்தில்! தொப்பல் தொப்பலாக நனைந்தே போய்விட்டேன்!

பத்மநாபன்: பயங்கரமாய் நனைந்து போய்விட்டாயா! அய்யோ! குழந்தை!

பவானி: என்ன அது, குழந்தையா? எந்தக் குழந்தை? (மழை உள்ளே அடிக்கிறது)

பத்மநாபன்: ஐயோ? என்ன சீரல்!

(வெளியில் ஓடுகிறார், காற்று பலமாக வீசுகிறது)

பவானி: (கதறுகிறாள்) எங்கே! மழையடிப்பது தெரியவில்லையா? அந்த மழையில்...

பத்மநாபன்: குழந்தை-குழந்தை...

(வெகு தூரத்தில் பத்மநாபன் குரல் கேட்கிறது) மின்னக்கலை!

பவானி: (புல்லரித்து மின்னக்கலையா? (உட்கார்ந்து விடுகிறாள்)

## நிஜம்மா

(**மொட்டை** மாடியில் கடற்கரையைநோக்கி கீழே பாயை விரித்துப்போட்டுக்கொண்டு படுத்துக்கொண்டிருக்கிறான். நாகராஜன். நிலவு வெள்ளி முலாம் பூசினதுபோல் வீடுகள் மீதும் வீதிகளிலும் படிந்திருக்கிறது; கடலிலிருந்து காற்று குளிர்ந்து வருகிறது. எதிர் வீட்டிலிருந்து ரேடியோ சங்கீதம் இனிமையாக மிதந்து வருகிறது. குழந்தைகள்தூங்கி விட்டார்கள்.

நாகராஜனுக்கு வயது முப்பந்தைந்து இருக்கும். வாழ்க்கையில் எல்லாம் அவனுக்கு இனிமைதான். மனைவி, குழந்தைகள், காலேஜ் ஆசிரியர் பதவி, பங்களா எல்லாம்.

மீனாஷிக்கும் ஒரு குறைவும் கிடையாது-அழகு ஆபரணங்கள், அன்பு, -எதிலும் இருபத்தைந்து வயதில் இரு குழந்தைகளைப் பெற்றும் கட்டு தளராமல் கன்னிகை போல இருந்தாள்.)

நாகராஜன்: இந்தா, சும்மா என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வா, இங்கே, இப்படி!

மீனாஷி: (படியேறி வந்து) இப்போ இப்படிச் சொல்லிவிட்டு காலமே அடுப்பங்கரையில் வந்து உட்கார்ந்துகொண்டு ஆச்சா, ஆச்சா என்கிறது.

நாகராஜன்: அதிகப் பிரசங்கி! உனக்கு உடம்பு துளிர்த்துப்போச்சு! முதுகு

மீனாஷி: ஆமாம்! இன்னும் கொஞ்ச நாள் போகட்டும் அடிக்கிறதற்கு!

நாகராஜன்: நீ பச்சைக் குழந்தை மாதிரிதான் இருக்கே!

மீனாஷி: என்ன செய்துவிட்டேன்?

நாகராஜன்: ஒன்றும் செய்யவில்லை. விளையாட்டும் கேலியும் குதிப்பும் ஓடுவதுமாக-குடித்தனக்காரியா லட்சணமா!

மீனாஷி: ஓகோ, பக்கத்தாத்து அம்மாமி மாதிரி சதா முகத்திலே கடுகு வெடித்துக்கொண்டு இருக்கணுமோ? ஆனால்...

நாகராஜன்: யார் சொன்னார்கள் அப்படியென்று?

மீனாஷி: பின்னே?

நாகராஜன்: உன் மாதிரிதான் எல்லோரும் இருக்கணும்னு சொல்றேன்.

மீனாஷி: இருக்கணும்னா வருமா?

நாகராஜன்:ஏன் வராது?

மீனாஷி: அதுக்குக்காலம், வயது, சமயம், சௌகரியம்-எல்லாம்-

நாகராஜன்:சேச்சேச்சே! இப்போ திடீரென்று கிழவி மாதிரி பேச ஆரம்பிக்கிறாயே!

மீனாஷி: இல்லையே! இதெல்லாம் அமையணும் என்கிறேன்!

நாகராஜன்: உனக்கு மட்டும் தான் அமைந்திருக்கோ?

மீனாஷி: நான் அப்படிச் சொல்லவில்லையே?

நாகராஜன்: உனக்கிருப்பது போல எல்லோருக்கும் அழகும், யௌவனமும் இருந்தால்தான் குதித்து விளையாடலாம் என்கிறாயா?

மீனாஷி: இல்லை

நாகராஜன்: அன்பும் ஆதரவும் இருக்க வேண்டும்.

மீனாஷி: வேண்டாமா பின்?

நாகராஜன்: இல்லையென்று தீர்மானித்து விட்டாய் போலிருக்கிறது. பாக்கி எல்லோருக்கும்!

மீனாஷி: அதுதான் இல்லை, நீங்களா அர்த்தம் பண்ணிக்கொண்டால் நான் என்ன சொல்கிறது?

நாகராஜன்: நீ ஒன்றும் செய்ய வேண்டாம். வாயை மூடிக்கொண்டு இப்படி உட்கார். ஞானாம்பாள் பாட்டு எப்படி இருக்கிறது பார்?

மீனாஷி: பாட்டைத்தான் போய்ப் பார்க்கிறதாக்கும். நான் கேட்கத்தான் செய்வேன்.

நாகராஜன்: ஏதாவது செய். புன்னாகவராளிதான் என்ன மனோகரமான ராகம்! அடடா!

மீனாஷி: ராகத்தைக் காட்டிலும் அந்தக் குரலில்தான் இருக்கிறது குழைவு பூராவும்.

நாகராஜன்: உன்குரல் கூட இப்பொழுது அப்படியிருக்கிறதே!

மீனாஷி: போங்கள்!

நாகராஜன்: (உருகி) மீனு!

மீனாஷி: (தூக்கி வாரிப்போட்டது போல) என்ன?

நாகராஜன்: வாழ்க்கை இனிமைதான், நீயும் சங்கீதமும் இருக்கும் வரையில்!

மீனாஷி: (சமாளித்துக்கொண்டு) இவ்வளவு தானா! என்னமோ என்று பயந்து போய்விட்டேன்!

நாகராஜன்: (கொஞ்சம் அதிருப்தியுடன்) ஏன் இவ்வளவுதானா என்கிறாய்? ஏன் பயந்து போய்விட்டாய்?

மீனாஷி: ஒன்றுமில்லை.

நாகராஜன்: என்ன ஒன்றுமில்லை?

மீனாஷி: அதான் ஒன்றுமில்லை என்கிறேன், எதற்காக இப்படி பதட்டம்?

நாகராஜன்: என்ன ஒன்றுமில்லை என்றுதான் கேட்கிறேன்!

மீனாஷி: (குனிந்து அவன் முகத்தைத் தடவ முயன்று) ஏன் திடீரென்று இப்படிக்கோபம்?

நாகராஜன்: (அவள் கையை தூரத் தள்ளி எழுந்து உட்கார்ந்து கொண்டு) எதற்காக இவ்வளவு தானா என்றாய்? என்னமோ பயந்து போய்விட்டேன் என்றாயே, எதற்காக? சொல்!

மீனாஷி: ஏதாவது இருந்தாலல்லவா சொல்ல! நீங்கள் திடீரென்று பேரைச் சொல்லிக்கூப்பிட்டது எனக்குத் தூக்கி வாரிப்போட்டுவிட்டது.

நாகராஜன்: பொய் சொல்லுகிறாய்! பொய் சொல்லாதே என்று எவ்வளவு தரம் சொல்லுகிறது உனக்கு?

மீனாஷி: பொய் ஒன்றுமில்லை. பொய் எதற்காகச் சொல்லணும் இப்பொழுது?

நாகராஜன்: உன் தர்க்கம் எல்லாம் வேண்டாம். உண்மையைச் சொல் இப்பொழுது!

மீனாஷி: என்ன ஏதாவது பைத்தியம் பிடித்துவிட்டதா? என்ன வந்து விட்டது இப்பொழுது இப்படிச் சீறுகிறீர்கள்?

நாகராஜன்: உன் பிடிவாதத்தை நீ விட மாட்டாயே! உண்மையைச் சொன்னால் என்ன வந்துவிட்டது கேடு உனக்கு?

மீனாஷி: (அலுத்துக்கொண்டு) நான் எப்படிச் சொன்னாலும் தான் நீங்கள் நம்புகிற வழக்கமே கிடையாதே! தெரியாத சமாசாரமா என்ன அது?

நாகராஜன்: (கோபாமாக) சொல்லுகிறாயா இல்லையா?

மீனாஷி: (தீர்மானமாக) சொல்லுவதற்கு ஏதாவது இருந்தா லல்லவா சொல்ல!

நாகராஜன்: ஓகோ, எவ்வளவு தைரியம் வந்துவிட்டது உனக்கு?

மீனாஷி: என்னத்தைச் சொல்லி விட்டேன் தைரியமாக?

நாகராஜன்: நீ வழிக்குவந்துவிட்டாய் என்றல்லவா நினைத்தேன்!

மீனாஷி: என் செய்து கொண்டிருந்தேன் வழிக்கு வர?

நாகராஜன்: இந்தா, மேல் மேல் வார்த்தையை விட்டு எனக்குக் கோபம் வரச்செய்யாதே!

மீனாஷி: தப்பிதமாக என்ன சொல்லுகிறேன் சொல்லுங்கள்.

நாகராஜன்: பொய் சொல்லுகிறாயே, போதாதா?

மீனாஷி: திரும்பவும் நீங்கள் சொன்னதைத்தான் சொல்லுகிறீர்கள். எது பொய்?

நாகராஜன்: நீ சொன்ன சமாதானம்.

மீனாஷி: நிஜம் எது என்கிறீர்கள்?

நாகராஜன்: எனக்கெப்படித் தெரியும் உன் மனதில் இருப்பது?

மீனாஷி: நான்தான் ஒன்றும் இல்லை என்கிறேனே, நம்பக் கூடாதா?

நாகராஜன்: (சீறி எழுந்த உன் மூஞ்சியைப் போல் இருக்க வேண்டும்

மீனாஷி: இதோ பாருங்கள். நான் சொல்வதை ஒரு நிமிஷம் கேளுங்கள். நான் பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தபொழுது நீங்கள் திடீரென்று என்னை மெதுவாகக் கூப்பிட்டது எனக்குத் தூக்கி வாரிப்போட்டுவிட்டது. அதை சமாளித்துக்கொள்ளத்தான் வேடிக்கையாக இவ்வளவுதானா? என்றேன். நீங்கள் அவ்வளவு உருக்கமாகப் பேசினபொழுது நான் வேடிக்கை செய்தது உங்களுக்குக் கோபம் வந்துவிட்டது. நான் ஏதோ மறைத்துப் பேசுகிறேன் என்று குதிக்கிறீர்கள்.

நாகராஜன்: (தலையணையில் சாய்ந்துகொண்டு) நிஜமாகவா?

மீனாஷி: (நெருங்கி) நிஜம்மா!

நாகராஜன்: இதை முதல்லேயே சொல்லப்படாதா!

மீனாஷி: கேட்டாத்தான! துர்வாசத்தைக் கட்டிக்கொண்டு மகா கஷ்டமாயிருக்கு.

நாகராஜன்: இந்தா, கிடக்கு, இங்கே வா!

மீனாஷி: எது கிடக்கு!

நாகராஜன்: (அசடுதட்டி) இதானே

மீனாஷி: (சந்தோஷத்துடன் அருகில் வந்து கொண்டே)

எதானே?

**மூன்று தலைமுறை**

**(தஞ்சாவூர்** ஜில்லாவில் ஒரு கிராமத்து அக்கிரகார வாசல் திண்ணை. சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள் மாப்பிள்ளைத் தலைகாணியில் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருக்கிறார். வயது சுமார் எழுபத்தைந்து இருக்கும்; ஆனால் பூஷணிப்பழம் போல கட்டுத்தளராமல் இருக்கிறார், விபூதிப்பூச்சும் பஞ்ச கச்சமுமாக இருக்கிறார். மேல் அங்கவஸ்திரம் வெண்மையாக இருக்கிறது; ஆனால் பொடி போட்ட மூக்கிலிருந்து வழிந்த சளிக்கரை பல இடங்களில் பட்டிருந்தது. அவரை நெருங்கினாலே பொடியின் வாசனை. பொடி மட்டை கையிலேயே இருக்கும். பழைய காலத்துப் பேர்வழியாதலால் மட்டைதான். டப்பா இல்லை).

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: (உள்ளே பார்த்தபடி) எலே! பயலே! யார்ரா அங்கே?

பார்வதியம்மாள்: (ரேழியில் வந்து) ஏன்?

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: அவன் எங்கே?

பார்வதி: கொல்லையிலே தோட்டத்திலே இருப்பான்!

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: இப்போ உள்ளே குரல் கேட்டதே! வாயிலே எப்ப பார்த்தாலும் அதக்கிண்டிருக்கானே அந்தப் பீடையைத் துப்பிவிட்டுவரப் போயிருக்கானோ? எவ்வளவு சொன்னாலும் அவனுக்கு.

(சுமார் நாற்பத்தைந்து வயதான சுப்ரமணிய அய்யர் மரியாதையாக வாசற்படியண்டை வந்து நிற்கிறார். சாஸ்திரிகள் அவரைப் பார்த்து கோபத்துடன் பேசுகிறார்.)

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: ஏண்டா, இந்தப் புகையிலை போடறதை எங்கே கத்துண்டே? எவ்வளவு சொன்னாலும் ஏன் விடமாட்டேங்கறே.பெரியவா அனுஷ்டானங்களை செய்யாவிட்டாலும் செய்யப்படாதுன்னு சொல்லியிருக்கிறதை செய்யாமல் இருக்க வாண்டோமோ?

சுப்ரமணிய அய்யர்: இல்லையே, இப்போ நிறத்திவிட்டேனே

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: பொய் வேறயா சொல்லணும்? நான் சுப்பிட்டப்புறம் போய் துப்பிட்டு வந்திருக்கே. வாய் நன்னாத் ஜாஸ்தியாயிடுத்து, பெரியவா என்கிற மட்டுமரியாதையே இல்லை. டவுன் வாசமும் படிப்பும் வரத்தான் வந்தது, எல்லாம் போச்சு. அவன் எங்கே, உன் பிள்ளை? அவன் நல்லவேளையாக புகையிலை போடறதில்லை. ஆனால் தலையைவெட்டினுட்டான். சதா மேலே ஷர்ட்டும் கையில் குட்டையுமாகத்தான் இருக்கான்! கைக்குட்டை எதுக்கு? நான் கூட வச்சிக்கல்லையே! எனக்கு அது இருந்தா? எவ்வளவோ சௌகரியம்! (பொடி மட்டையைத் திறந்து தட்டி இரண்டு விரல் கொள்ளப்பொடியெடுத்து சுர் என்று உறிஞ்சுகிறார்.)

பார்வதி: ஆமாம், அவனெச் சொல்றேளே, இந்தப் பொடி?

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: என்னடி வேடிக்கையாப் பேசரே? பொடியும் புகையிலையும் ஒண்ணா?

பார்வதி: புகையிலைலேருந்தான் பொடி பண்றதாமே!

சிவராமகிருஷ்ண சாஸ்திரி: இதெல்லாம் குயுத்தி, பெரியவாள் பொடிக்கு தோஷம் சொல்லவில்லை. எங்கடா உம் புள்ளே, எங்கே? இன்னிக்கி புதூர் பாகவதர்வாள் நம்மாத்துலே சாப்பிடறார், அவர் எதிரில் அவன் தெரியாமல் சட்டை கிட்டை போட்டுண்டு வந்து சாப்பிட உக்காந்துடப் போறான். என் மானம் போய்விடும், ஜாக்கிரதை.

**2**

**வாய்**க்கால் மதகருகில் ஒரு மரத்தடி. உள்ளூரில் குருக்களாக இருக்கும் அழகிய பையன் தேவசிகாமணியும் சுப்ரமணிய அய்யர் மகன் ராஜமும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள் இருவருக்கும் ஒரே வயது அதாவது சுமார் இருபது. இருவரும் கூட விளையாடினவர்கள்.

தேவசிகாமணி: குந்தாணி மீனாஷியின் முகவெட்டும் ஆக்டும் வெகுஜோர்தாண்டா;

ராஜம்: இதெல்லாம் என்ன வெட்டு, என் ஆக்டு ஆங்கிலப் படங்களைப் பார்க்க வேண்டும், நார்மா ஷேரர்.

தேவசிகாமணி: போடா.

(சுப்ரமணிய அய்யர் திடீரென்று வாய்க்கால் ஓரமாக வந்தவர் அவர்களை அங்கே காண்கிறார். இருவர் கையிலும் இரண்டு சிகரெட்டுகள். இருக்கின்றன. அந்தக் காட்சியைக் கண்ட அவர் அப்படியே ஸ்தம்பித்துப் போய்விடுகிறார்.)

சுப்ரமணிய அய்யர்: ஏண்டா, ஏண்டா!

ராஜம்: (உட்கார்ந்ததபடியே மெதுவாகச் சிரித்துக்கொண்டு என்னப்பா!

சுப்ரமணிய அய்யர்: என்னவா?

ராஜம்: சிகரெட்டுதானே? அதுதான் நீங்கள் எல்லாம் பாத்து சங்கடப் படப்படாதுன்னு இங்கே வந்துவிட்டேன்.

சுப்ரமணிய அய்யர்: ஏண்டா, அவ்வளவு துணிச்சல் எப்போடா உனக்கு வந்தது?

ராஜம்: இதில் என்ன தப்பு அப்பா?

சுப்ரமணிய அய்யர்: என்ன தப்பா?

ராஜம்: தாத்தா பொடியா போடறார்; நீ புகையிலையெ வாயியேல அடக்கிக்கறே; நான் புகையா விடறேன்.

சுப்ரமணிய அய்யர்: உன்னைப் படிக்க வைத்தது இப்படி விபரீதமாக முடிந்துவிட்டது!

ராஜம்: ஒன்றும் விபரீதமில்லை, அப்பா; எல்லாம் கால வித்தியாசங்களால் ஏற்படும் மாறுதல்கள்; தாத்தா பொடி போடுவது அவர் தகப்பனாருக்குப் பிடிக்காது; நீ புகையிலை போடுவது தாத்தாவுக்குப் பிடிக்காது; நான் சிகரெட் பிடிப்பது உனக்குப் பிடிக்கவில்லை.

சுப்ரமணிய அய்யர்: உன் புள்ளை?

ராஜம்: இல்லை, புகையிலைக்கு மூன்று தலைமுறைதான், அப்பா! இதுக்கு மேலே அது மாறாது! தேவசிகாமணி, நீ பொடியும் போடுகிறாய். புகையிலையும் போடுகிறாய். இப்போது சிகரெட்டும் பிடிக்கிறாய்-நீ மூன்றும் ஒன்று திரண்ட உருவம். எங்கப்பா இன்னும் கொஞ்சநாள் கழித்து பொடிபோட ஆரம்பிப்பார்.

சுப்ரமணிய அய்யர்: டேய், என்ன அதிகப் பிரசங்கத்தனம்!

ராஜம்: ஆனால் நான் மட்டும் பொடியையும் புகையிலையும் தொடமாட்டேன்!

## மூன்றாவது முடி

ஒரு வீட்டுக்கூடம். சுவற்றோரத்தில் ஒரு பபடுக்கையில் குஞ்சு படுத்துக்கொண்டிருக்கிறான். அவனுக்கு ஐந்து வயது. நல்லமுகவெட்டு; ஆனால் எலும்பும் தோலுமாகத்தான் இருக்கிறான். கடுமையான ஜுரத்தால் மேலும் பீடிக்கப்பட்டு, பிரக்ஞையற்றுக் கிடக்கிறான்.

பக்கத்தில் பாலுவும் ருக்மணியும் வாடிய முகங்களுடன் உட்கார்ந்து அவனையே கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். பாலு சுமார் முப்பத்தி ஐந்து வயது கொண்டவன். பித்தன் போன்ற தோற்றமுடையவன். ருக்மணி 24 வயதான உடல் கட்டுடைய ஒற்றை நாடிப்பெண்.

இரவு 2மணி: கூடத்தில் ஒரே ஒரு அமெரிக்கன் விளக்கு சிறியதாக வைக்கப்பட்டிருக்கிறது. படுக்கையருகே மருந்து சீஸா, அவுன்சு கிளாஸ், கஞ்சிப் பாத்திரம் முதலியவை தனித்தனி இடங்களிலிருக்கின்றன.

ருக்மணி: (மெதுவாக) ஈசுவர கிருபை! ஜுரம் மட்டுப்பட்டு விட்டது! இப்பொழுது தொட்டுப்பாருங்கள்!

பாலு: (தொட்டுப் பார்த்து) இந்த நிலைமையில் திடீரென்று இப்படிக்கூட ஜுரம் குறையக் கூடாது கபம் இன்னும் குறையவில்லையே!

ருக்மணி: அம்மாள் சொல்லுவாள். வியர்வை பிடித்தால் நல்லதென்று. இதோ பாருங்கள் நெற்றியை! முகத்தில் கொஞ்சம் தெளிவு கூட ஏற்பட்டிருக்கிறது. அப்பா! கவலைப்பட முடிய வில்லையே. நல்லவேளையாய்...! உங்கள் முகம் கூட என்னமோ மாதிரி போய்விட்டது. குழந்தைக்கு உடம்புக்கு வந்ததில் தானே உங்களுக்குக் கவலை இன்னதென்று தெரிகிறது. அதற்கு முன் வீடு கூட தங்கமாட்டீர்கள்.

பாலு: (முகத்தை சுளித்து) அதை நினைப்பூட்டாதே. நான் மன்னிப்பதற் கிடமில்லா அக்கிரமத்தை செய்திருக்கிறேன். குழந்தையின் உடம்பைப் பற்றி நான் இவ்வளவு வருஷமாக ஒரு கவலையும் கொள்ளவில்லை. அவனுடம்பு இன்னம் சௌக்கியமாக இருந்தால் இந்த ஜுரம் அவனை அதிகமாக பாதிக்காது அவன் உடம்பு நிலையில் இதைத் தாங்குவதற்கே அவன் உடம்பில் சக்தி இல்லையே அடடா என்ன முட்டாள்தனம் செய்துவிட்டேன்.

ருக்மணி: லோகத்திலே எல்லோரும் குழந்தைகளுக்கு என்ன செய்கிறார்கள்? அதை நாம் செய்யவில்லை? அவன் சுபாவம்–

பாலு: (கோபத்துடன்) போதும் பேசாதே! நாம் பண்ணின பிசகிற்குப் பிறகு இப்பொழுது சமாதானம் வேறயா?

ருக்மணி: நீங்கள் கவனிக்கவில்லை என்று, ஏன் என்ன குறைத்து செய்துவிட்டேன் அவனுக்கு? எவ்வளவு மருந்து, இங்கே வாங்கினது. அப்போ அனுப்பினது.

பாலு: முதலில் அவன் ஊர்வதற்கே ஒரு பெரிய குறைவை செய்துவிட்ட பிறகு என்ன மருந்து கொடுத்தால் என்ன? பாவம் அவனுக்கு ஒரு குழந்தையின் சாதாரண உரிமை கூடக் கிடைக்கவில்லை அக்ரமம், நானும் அதை அனுமதித்தேனே!

ருக்மணி: என்ன சொல்லுகிறீர்கள்?

பாலு: (வேகத்துடன்) என்ன சொல்லுகிறேனா? உனக்குத் தெரியவில்லையா?

ருக்மணி: என்ன?

பாலு: ஒரு தாய் செய்ய வேண்டியதை நீ அவன் பால் செய்தாயா?

ருக்மணி: நன்றாய்ச் சொன்னீர்கள் ஒரு வார்த்தை! போனாலும் போகிறதென்று? நான் அவனை வளர்த்ததுபோல் எல்லாரும் செய்தால் போதும். புதனும் சனியும் ஒரு நாள் தவறாமல் எண்ணெய் காலம் தவறாமல் ஆகாரம்– மருந்து.

பாலு: மருந்தே ஏன் அவசியமாயிற்று?

ருக்மணி: பிறவியிலிருந்து தான் அவன் பலஹீனமாயிருந்தானே!

ருக்மணி: (எதிர்த்து) எதனால் என்கிறீர்கள்?

பாலு: எதனாலா? எல்லாத் தாய்களையும் போல நீ அவனை

ருக்மணி: (கோபத்துடன்) போதும்!

பாலு: (வேகத்துடன்) தாயற்ற குழந்தை போல அவனை வளர்த்தாய். உனக்கு ஒரு சமயத்தில் கூட இரக்கம் வந்து.

ருக்மணி: (மனஸ்தாபக் குறியுடன்) என் மீது மட்டும் சுமத்தப்பார்க்கிறீர்கள். நான் என்ன செய்யவில்லை?

பாலு: உன்னுடைய மற்ற செயல்கள் எல்லாம் வீண்! உன் உடலைக் காத்துக்கொண்டாய்-அவன் உடலை பாழாக்கினாய்!

ருக்மணி: அதனாலா குழந்தை இளைத்துப் போனான்? எவ்வளவோ குழந்தைகள் தாயின் பலம் இல்லாமல் குண்டு போல இருக்கவில்லையா?

பாலு: என்ன மடத்தனமாகப் பேசுகிறாய்?

ருக்மணி: பின் ஏன் நீங்கள் ஒன்றும் சொல்லாமலிருந்தீர்கள்? பாலு: நானும் மதிமயக்கத்தில் உன்னால்தான் புத்தி இல்லாமல் இருந்துவிட்டேன்.

ருக்மணி: அது அபாண்டம், என்று என்னுடன் இதமாகப் பேசி இருக்கிறீர்கள். இவன் பிறந்த பிறகா? நீங்கள் தான்.

பாலு: அவன் பிறந்த பிறகு, அதனால்தான் நான் உன்னுடன் பழைய ரீதியில் பேசவில்லை என்கிறாயா?

ருக்மணி: ஆமாம்!

பாலு: நீ பெற்ற பிள்ளையே உனக்கும் எனக்கும் நடுவில் திரையாக வந்துவிட்டான் என்று சொல்கிறாயா?

ருக்மணி: ஆமாம்!

பாலு: நீ பெற்ற பிள்ளையே உனக்கும் எனக்கும் நடுவில் திரையாக வந்துவிட்டான் என்று சொல்கிறாயா?

ருக்மணி: அப்படித்தான் நீங்கள் நடந்து கொண்டீர்கள்.

பாலு: அவனைக் குற்றம் சாட்டுகிறாயா? இத்தனை நாள் விரோதத்தை மனதில் வைத்துக்கொண்டா நீ அவனை வளர்த்திருக்கிறாய்- என் குழந்தையை?

ருக்மணி: எனக்கு-பெற்றவளுக்கு-இல்லையா பாத்தியம்?

பாலு: நீதான் அவனை விரோதியாக பாவித்துவிட்டாயே? ஆஹா, என்ன பிசகு பண்ணிவிட்டேன்!

ருக்மணி: என்ன பிசகு?

பாலு: உன்னை அன்றே கண்டிக்காத பிசகுதான்!

ருக்மணி: என் குழந்தையிடம் நான் நடந்துகொள்ள வேண்டியதைப் பற்றி கண்டிப்பா?

குஞ்சு: (ஜன்னியில்) அம்மா, பெருமாள் மாடு வரது! மாட்டுக்காரன் என்னெ கூப்படறான், போகப்போறேன்!

ருக்மணி: (பதறி) ஐயோ, நான் என்ன செய்வேன்? என் குழந்தை கண்ணில் என்னன்னமோ படுகிறதே.

பாலு: (யோசனையிலிருந்து திரும்பி) என்ன?

ருக்மணி: மாடும், மனுஷனும்-யமனும் கடாவும் குழந்தை கண்ணில் படுகிறதே! அபச குணமாச்சே! (பல பலவென்று கண்ணீர் வடிக்கிறாள்.)

பாலு: சீ, விளையாட்டுப் பிள்ளைமனதில் பெருமாள் மாடு ஞாபகம். வேறொன்றுமில்லை. (குழந்தையைத் தடவுகிறான்)

ருக்மணி: (கைகூப்பி) ஸ்வாமி! என் கண்மணியை இப்பொழுது காப்பாற்றிவிடுங்கள்! இனிமேல் நான் ஜாக்கிரதையாக இருக்கிறேன்! (கூடத்தில் தொங்கிக் கொண்டிருந்த படங்களைப் பார்த்துக் கும்பிடுகிறாள்)

பாலு: (விசனத்துடன்) நீ என்ன செய்யவில்லை? எல்லாம்தான் செய்தாய். நான் கவனிக்காமல் இருந்ததுதான் குற்றம். உன் தலையில் எல்லா பொறுப்பையும் சுமத்திவிட்டு உபயோகமற்ற கனவுகள் கண்டு கொண்டிருந்தேன்.

ருக்மணி: (சமாதானமாக) நீங்கள் என்ன கவனிப்பது இருக்கிறது? நானல்லவா பால் கொடுத்துப் போஷிக்க வேண்டியவள். நான் தவறி விட்டேன்-ஐயோ குடி முழுகிப்போய்விடும் போலிருக்கிறதே!

பாலு: எனக்காக நீ அந்தக் கடமையை-

ருக்மணி: (சட்டென்று) இல்லை, இல்லை; எனக்காக மட்டும் தான்!

பாலு: என்ன?

ருக்மணி: பொய் இல்லை, என் அழகு-பாழாய்ப்போனது! அதை-

பாலு: (குஞ்சுவின் சுவாஸத்தைக் கவனித்து) குழந்தை திணறுகிறானே, அடி!

ருக்மணி: (உச்சி மேட்டில் சாகுருவி கத்துவதைக் கேட்டு) அந்த க்ஷாமத்தை சட்டென்று விரட்டுங்கள். (பாலு

எழுந்து வெளியில் போய் அதை விரட்டிவிட்டு திரும்பி வந்து உட்காருகிறான். தெருவில் ஜன்ம துக்கம், ஜரா துக்கம் என்ற குரல் கேட்கிறது)

பாலு: (ஏக்கத்துடன்) ருக்கு, குஞ்சுவால் தாண்டி நான் உன்னைவிட்டுப் போகாமல் இருந்தேன்.

ருக்மணி: (ஆச்சரியத்துடன்) ஓடியா? குஞ்சுவாலா? குஞ்சு பிறக்காவிட்டால்?

பாலு: நீ என்னைக் காண முடியாது!

ருக்மணி: ஆனால்-என்னை

பாலு: அதெல்லாம் என்னைக் கேட்காதே!

ருக்மணி: என் மேலிருந்த ஆசை?

பாலு: என்ன பைத்தியம்!

ருக்மணி: ஆனால் குஞ்சுதானா காரணம்?

பாலு: ஆமாம்!

ருக்மணி: குஞ்சுதானா உங்கள் ஆதாரம்?

பாலு: முக்கியமாக! உன் அழகும் அருகாமையும் அப்புறம்தான்! ருக்மணி: எதற்காக என் குழந்தையையே நான் கெடுக்க மனங்கொண்டேனோ அது...

பாலு: அப்படிச் செய்தும் பயனில்லை!

ருக்மணி: உங்கள் மனதில் நான் இல்லை!

பாலு: இல்லை! அவன் தான் உனக்கும் எனக்கும் மத்தியில்

ருக்மணி: மத்தியில்?

பாலு: இணைப்பு

ருக்மணி: ஈசுவரா! நான் என்ன செய்வேன்!

பாலு: எதற்கு!

ருக்மணி: இந்த இணைப்பு கெட்டியாய் இருக்க வேண்டுமே! என் கழுத்துத் தாலியின் மற்றொரு முடிச்சாக!

பாலு: ஆ!

ருக்மணி: ஐயோ! இதென்ன குழந்தை-!

(குஞ்சுவின் சுவாசம் வெளியேறுகிறது)

பாலு: ச்! கத்தாதே! குழந்தை சிரமத்தால் தூங்குகிறான்!

ருக்மணி: தூக்கம் என்றால் எனக்கு என்னமோ போலிருக்கிறது.

பாலு: தூக்கத்திலும், முழிப்பிலும் அவன் நமது குழந்தை! அவன் ஞாபகம்தானே நமக்கு.

ருக்மணி: ஆமாம், அவன் நினைவுதான் நமக்கு! (பாலுவிடம் நெருங்கி நடுங்குகிறாள். பாலு அவளை ஒரு கையால் அணைத்து ஆற்றுகிறான்.)

## சில்லரைச் செலவுகள்

**ரா**மசாமி ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு கவலையோடு உட்கார்ந்திருக்கிறார். கீழே தேர்தல் சத்தம். கூர்ந்து கவனிக்கிறார்.

குரல்: ஸ்ரீ பரமானந்தர் ஒருவர்தான் நிச்சயமாக நமக்கு உழைக்கக் கூடியவர்! பரமானந்தருக்கே ஓட்டுக் கொடுங்கள்-ஜனநாயகத்திற்கு ஜே!

ராமசாமி: ஊம் பரமானந்தத்துக்கு ஓட்டுக் கொடுங்கள். (கேலியாக) ஓட்டை கூரையிலிருந்து பிரித்து எடுத்துக்கொடுங்கள், பரமானந்தர்கையில்! (அந்தக் குரலை புரளி செய்கிறார்) ஜனநாயகத்திற்கு ஜே!

குரல்: (மறுபடியும்) ஜனநாயகத்திற்கு ஜே!

ராமசாமி: இதைப்போன்ற ஒரு கேடுகெட்ட வார்த்தை இனிமேல் வரவே வராது. அந்த வார்த்தைக்கு மாத்திரம் வெட்கம், மானம் எதானும் இருந்தால் தூக்குப் போட்டுக்கொண்டு இத்தனை நாள் செத்துப்போயிருக்கும்-எங்கே இந்த மனுஜன் வருகிறேன் என்று சொல்லிட்டுப்போனவரை இன்னம் காணோம்... டேய், முத்து! முத்து: சார்!

ராமசாமி: குமாரசாமி வந்தாரோ?

முத்து: இல்லியே.

ராமசாமி: தொலைந்து போகட்டும் எல்லோருக்கும் இன்னிக்கித் தான் வேலை, தலையைப் பிய்த்துக்கொண்டு போகும்-சுத்த மட இழவுகள்...

(குமாரசாமி வந்த சப்தம் கேட்டு இறைச்சலை நிறுத்துகிறார். அவரோடு இன்னும் யாரோ வந்திருக்கிறார்கள்.)

குரல்: யாருக்கு அர்ச்சனை நடக்கிறது. (திரும்பிப் பார்த்து)...

ஓஹோ, முத்துவுக்கா?

முத்து: இல்லையே, நீங்கள் வரல்லைன்னு...

ராமசாமி: (அடக்குவதற்காக அவனை) சீ சீ! வாயை மூடு, கழுதை! என்ன வரவர வாய் ஜாஸ்தியாய்ப் போயிட்டாப்போல இருக்கே! (வந்தவர்களிடம்) ஆமான்னா! காலமே முதல் இவனோடு போராட முடியல்லே. அதுதான் சொல்லிக்கொண்டிருந்தேன்.

குரல்: குழந்தைகளே எப்பவும் அப்படித்தான், அவாளுக்கு என்ன தெரியும்? அதிருக்கட்டும், ஸாரைப் பழக்கமில்லையே உங்களுக்கு?

ராமசாமி: இல்லியே, எங்கேய பார்த்த ஞாபகம், ஒரு வேளை கும்பகோணத்து மகாமகத்தின் போது...

குரல்: இல்லை, இல்லை. நீங்க அவரைப் பார்த்திருக்க முடியாது. அவர் பம்பாயிலே இருந்து இப்பத்தான் வந்திருக்கார்!

ராமசாமி: ஆ! ஓஹோ?...ஒரு வேளை பேப்பர்களிலே ஏதாவது போட்டோ, கீட்டோபார்த்திருப்பேனா என்னமோ...

குரல்: அது சரி! அப்படி இருக்கும்! இவர் பம்பாயிலே ஒரு... மாபெரும்தலைவர்! துணி வெளுக்கும்தொழிலாளர்களின் கட்சித்தலைவர்!

ராமசாமி: ஓஹோ!

குரல்:"மன்மதநாத் சனியன்று" பேரு!

ராமசாமி:(புரியாமல் எது?

குரல்: மன்மத நாத் சனியன்!

ராமசாமி: ஓகோ!

குரல்: (ஸ்ரீ சனியைனைப் பார்த்து) உங்களுக்கு ராமசாமியைத் தெரியாதே..

மன்மதன்: நைஜான்தா...

ராமசாமி: (பயந்து) டேயப்பா! என்ன சொல்றார்?

குரல்: புரியாமல் என்ன?

ராமசாமி: பின்னெ, ஆளைத்தான் தெரியாதுன்னு சொல்றானா, இல்லே... அவருடைய கையிலே பணம் கிணம் இல்லை, ஒண்ணு அரை கடன் கேட்கிறாரா?

மன்மதன்: ஆரேரேரே! பணம், பணம், என்னாய்யா பணம்? நம்பள்கி பணம்... தூதூ... வேண்டாம்! ராமசாமி: உஸ்! சொல்றது புரியல்லேய்யா-தமிழ்லே சொல்லுமே.

குரல்: அடடே, நான்தஉன் சொல்றேனே... எலக்ஷன்லே நம்ப கட்சிக்கு பேசறத்துக்கு ஆள் முதல் நம்பர் ஆள்...

ராமசாமி: இவரா?

குரல்: ஆம்! எப்படிப் பேசுவார் தெரியுமோ? நெருப்பைக் கக்குவார்! பம்பாயிலே இவர் பெயரைச் சொன்னால் போதும்... ராமசாமி: அப்படியா!

குரல்: (காற்றுள்ள போதே!) நிச்சயமாக, நீங்கள் பேப்பர்களில் எல்லாம் பார்த்தது கிடையாது போலிருக்கிறது; (மன்மதனைநோக்கி) இவர்தான் தோழர் ராமசாமி; இந்தத் தடவை எலக்ஷனுக்கு நிற்கிறார்.... நாளைக் காலையில் எலக்ஷன்....

மன்மதன் : நாளிக்கியா!

குரல்: பின்னே என்ன? நான்தான் சொன்னேனே! இன்னிக்கி ராத்திரி பூரா.....

ராமசாமி: தூங்கவே கூடாது. தெரியுமா குமாரசாமிப் பிள்ளை!

மன்மதன்: ப்சு! எஸ்! எஸ்!

ராமசாமி: இப்ப முதல் காரியம், என்ன செய்ய வேண்டும் தெரியுமோ, இல்லியோ...

குரல்: உஸ்! எங்களுக்கு ஒண்ணும் தெரியாது. பேசாமல் இருங்கள், எல்லாம் நாங்கள் பேசி ஒரு முடிவு கட்டியாய் விட்டது!

ராமசாமி: என்ன?

குரல்: அதெல்லாம் உமக்கென்னத்துக்கு? எல்லாவற்றிற்கும் ஒரு கை காவலாக ஒரு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாயை...

ராமசாமி: (வாயைத் திறந்து) ஆ! என்ன? (பாதி மூர்ச்சை) எவ்வளவு?

குரல்: அட! இது என்ன பெரிய விஷயமா? அப்படிக் கொடுத்தாலும் எல்லாவற்றையுமா வாரி இறைத்து விடப்போகிறார்கள்?

ராமசாமி: ஆமாய்யா! இதோடே நான் ஓட்டாண்டியாக இந்த ஊரை விட்டு ஓடிப்போகும்படி ஏற்பாடு செய்துவிடாதீர்கள்...

குரல்: மன்மநாத் இருக்கும்போது, நமக்கு ஏது தோல்வி? இரவு எல்லாம் தூங்கவே கூடாது-தெரியுமா? மிஸ்டர் மன்மதநாத் உங்களுக்கும் நான் சொல்லுகிறேன். ஒரு காரை எடுத்துக்கொண்டு பிரசாரம் செய்துகொண்டே (சந்திரகேரன் வருகிறார்)

ராமசாமி: வரணும்... வரணும்... சந்துரு

சந்திரசேகரன்: எலக்ஷன் நாளைக்குப் போலே இருக்கு... பார்த்துக்கோங்கோ... என்ன. இந்தக் கோவில்களிலெல்லாம் விளக்குகள் போடச்சொல்லி...

ராமசாமி: எனக்கு எலக்ஷனாகட்டும்.... நிச்சயம் இந்தக் கோவிலுக்கு விளக்குகள் போடச்சொல்லி...

சந்திரசேகரன்: அப்படியெல்லாம் பயப்பட வேண்டிய அவசியமே இல்லை... ஆண்டவன் இருக்கார்.

ராமசாமி: அது மாத்திரமில்லை. நம் கையிலே இருக்கிறதைப் பண்ணிப் பார்த்துவிட்டால், பிறகு இருக்கு தலை எழுத்து... இதோ ஸ்ரீ மன்மதன், இவர் பம்பாயில் பிரபல தலைவர். நமக்கு பிரசாரத்திற்காக இங்கே வந்திருக்கா... மன்மதன்: எஸ்.

ராமசாமி: என்ன! சந்துரு! இந்தப் பக்கம்... அத்தி பூத்தாற்போல... சந்திரசேகரன்: ஒண்ணுமில்ல. நம்ம டிவிஷன்லே ஒரு நுற்றி இருபத்தி ஏழு பேர்...

ராமசாமி: உம்.

சந்திரசேகரன்: ஏழாவது டிவிஷன்லே ஒரு முன்னூற்று சொச்சம்... அதோடு கூட, அந்த நாதமுனி பக்கம் இருக்கறவர்களிலே ஒரு இரு நூற்று ஐம்பது...

ராமசாமி: இருங்கோ, இருங்கோ, கொஞ்சம்.

சந்திரசேகரன்: ஐயம்பேட்டை பிற்போக்குக் கட்சிலே ஒரு நூற்று ஏழு.

ராமசாமி: இவ்வளவும் எனக்கா?

சந்திரசேகரன்: பின்னே! ஏற்பாடு பண்ணி ஆனப்பறம் தானே வந்திருக்கேன்...ஆனா.....

ராமசாமி: என்ன நடுவிலே சந்தேகம் வந்துவிட்டது.

சந்திரசேகரன்: ஒரு இருநூற்று ஐம்பது ரூபாய் சிலவாகும் என் டிவிஷன்லே...

ராமசாமி: அடேயப்பா....

சந்திரசேகரன்: ஓட்டுக்கள் அவ்வளவும் நம்ம பக்கம் ஆனா.... விஷயம் இன்னொன்று பாக்கி இருக்கிறது.

ராமசாமி: என்ன?

சந்திரசேகரன்: இந்தப் பணத்தை எங்கிட்ட இப்போ குடுங்கோ, நாளைக்கிக் காலமே, விடிந்த உடனே ஒரு ஊர்கோலம், மேளதாளத்தோட, உங்களை வைத்து! நான் சுத்திக்கொண்டே வருகிறேன், ராமசாமிக்கு ஜே! என்று!

ராமசாமி: அடேயப்பா! அப்படி யொண்ணும் வாண்டாமையா!

சந்திரசேகரன்: உங்களுக்குத் தெரியவே தெரியாது விஷயம். அப்பொழுது தான் விஷயம் நடக்கும்! என்ன மிஸ்டர்... மிஸ்டர்...மன்மதன்?

மன்மதன்: எஸ்.

சந்திரசேகரன்: சிவ.சிவ! இந்த எழவு எஸ் ஸைத்தவிர வேறு ஒன்றுசொல்லுமே!

(மன்மதன் உள்பட எல்லோரும் சிரிக்கிறார்கள்.)

குரல்: மன்மதன் இருக்கிறபோது நமக்கு ஏது விசாரம்? பேச்சா பேசுவார். நெருப்பையல்லவா கக்குவார்!

சந்திரசேகரன்: அப்ப, இதோ இன்னும் கால்மணியிலே வரேன்... டயமில்லே, வீண் பொழுது போக்க! பணத்தை ரெடியாக வைத்துக் கொள்ளுங்கோ, நீங்க எலக்ஷனைப் பற்றி கவலையே படவேண்டியதில்லை.

(போகிறான்)..

குரல்: அப்போ, நாங்களும் வரலாமா? பணத்தைக் குடுத்தா வேலையை ஆரம்பிக்க சௌகர்யமாக இருக்கும்

ராமசாமி: பாங்கிலே இருந்து...

குரல்: அப்போது மன்மதனுக்கு ஒரு ஆயிரத்து ஐந்நூறு ரூபாயைக் குடுத்துடுங்கோ, இப்போ எலக்ஷன் சிலவுகளை சில்லரையாகக் கொடுத்துக்கொண்டால் போச்சு- (எழுத்திருந்தவர் உட்கார்ந்து கொண்டு) இதெல்லாம் ஒருவருடைய சௌகர்யத்தை இன்னொருவர் பார்த்துக்கொண்டு போக வேண்டும்.. ராமசாமி: (உள்ளே போய் பணத்தை எடுத்துக்கொண்டு வருகிறார்.) இந்தாங்கோ, உங்களை எல்லாம் நம்பித்தான் இதிலே இறங்கினேன்...

(நாதமுனி வருகிறார்)

அடேடே! நாதமுனியா? வரணும், வரணும் இப்போதான் சந்துரு சொன்னார்.

நாதமுனி: ஆம்! இப்பொழுது ஒரு நானூறு வோட்டுக்கள் வேறே சேர்ந்திருக்கு. இப்ப சட்டென்று ஒரு இருநூற்றைம்பது ரூபாய் இருந்தால் அவ்வளவும் நிச்சயம்...

ராமசாமி: பணமா! ஏது, அவ்வளவுக்கு எட்டாது போலிருக்கே.

நாதமுனி: அப்போ, சரி! அர்ஜண்டாக நான் போகணும், ஆனா நானூறு ஓட்டுன்னா கிள்ளுக்கீரை இல்லை, எலக்ஷனே ஜெயிச்சுப் போகும். ( போக எத்தனிக்கிறான்).

ராமசாமி: அடேடே, கொஞ்சம் இருங்கள் சார்...

(குமாரசாமி, மன்மதன்)-அப்ப, நாங்கள் நேரத்தை இங்கே வீணாக்கப்படாது, போயீட்டு...

ராமசாமி: சரி, செய்யுங்கோ

(அவர்கள் போகிறார்கள்)

இதிலேயே எனக்கு மூவாயிரத்துக்கு மேலே ஆயிடுத்து.

நாதமுனி: எல்லாரையும் அர்ஜண்டா அங்கேயே வச்சிட்டு வந்திருக்கேன். பணம் இருந்தால் உடனே கொடுங்கள்; அவ்வளவு வோட்டுகளும் நமக்குத்தான்.

ராமசாமி: நான் வரலாமோ, அங்கே!

நாதமுனி: ஏது, அவநம்பிக்கைப் படுகிறாப் போலிருக்கு! அங்கே பரமானந்தா நின்று கொண்டிருக்கிறார். நான் ஜாடை சமிஞ்ஞைகளால் ஓட்டர்களை சரிப்படுத்தி இருக்கிற சமயத்திலே, நீங்கள் வந்தால் அப்புறம் நமக்கேது ஓட்டு?

ராமசாமி: ஐயையோ!

நாதமுனி: பின்னே! குடுக்குறதுன்னா பணம் உடனே குடுங்கோ! நாழியாச்சு, இதுக்குள்ளேயே, பரமானந்தர் என்ன பண்ணி இருக்கிறாரோ அவர்களை!

ராமசாமி: இந்தாங்கோ- என்னமோ உங்களையே நம்பித்தான்.

நாதமுனி: ஒரு பயமில்லை! எலக்ஷன் ஆனதும் அந்தக் கோவிலிலே இருக்கிற விளக்கு ஒன்றையும்...

ராமசாமி: இரண்டாகப் பண்ணி

நாதமுனி: ஆம், அந்தக் கோவிலிலே நீங்க வந்தப்புறம் விளக்கே எரியப்படாது! என் கட்சி ஆட்களிடம் அப்படியே சொல்லணும். நான் போகட்டுமா...

(அவசரமாகப் போகிறான்)

ராமசாமி: சரி, அப்பா! இனிமேல் ஏழேழு ஜன்மங்கள் எடுத்தாலும் எலக்ஷனுக்கு நிற்கும் துரதிர்ஷ்டத்தை மாத்திரம் எனக்குக் கொடுக்காதே, பகவானே!

(அவசரமாகப் போகிறான்)

ராமசாமி: சரி அப்பா! இனிமேல் ஏழேழு ஜன்மங்கள் எடுத்தாலும் எலக்ஷனுக்கு நிற்கும் துரதிர்ஷ்டத்தை மாத்திரம் எனக்குக் கொடுக்காதே, பகவானே!

(வாசலில் சத்தம் சார் மிஸ்டர் ராமசாமி)

ராமசாமி: (வெளியில் கேட்காத குரலில்) ஐயையோ, அதுஎன்ன கஷ்டமோ? டேய், முத்து-டேய்!

முத்து: ஏன் அப்பா?

ராமசாமி: அப்பா இல்லைன்னு சொல்லிடு, போ, போ ஓடு (முத்து வாசலில் போகிறான்).

(அப்பா இல்லை என்று சொல்லும் சத்தம் கேட்கிறது. ராமசாமிக்குப் போன உயிர் திரும்பி வர...)

உஸ் அப்பாடா!

**அந்தமான் கைதி**

மயிலாப்பூரில், வடக்கு மாடத் தெருவில், ஒரு விசாலமான வீடு, தெருவைப் பார்த்த பெரிய அறையின் நடுவில் ஒரு மேஜை இருக்கிறது. சுற்றி இரண்டு மூன்று நாற்காலிகள். அதன் வாசற் பக்கத்து ஜன்னல் திறந்திருக்கிறது.

ஜயா ஜன்னலில் உட்கார்ந்துகொண்டு எதிரே தெரிந்த குளத்தைக் குறிப்பற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். கண்களில் நீர் பெருகி வழிந்துகொண்டிருக்கிறது. அவளுக்கு வயது சுமார் இருபத்தைந்து இருக்கும். உடலில் ஆபரணங்களே கிடையாது. தலைமயிரைக் கோதி முடித்திருக்கிறாள்.

அஸ்தமித்து கை மறையும் சமயம், தெருவில் ஏற்கனவே மின்சார விளக்குகள் ஏற்றப்பட்டு விட்டன. ஜயா உட்கார்ந்திருந்த அறை மட்டும் பாதி இருளில் மங்கி இருக்கிறது.

சுந்தரம் உற்சாகமாக உள்ளே நுழைகிறான். அறை இருண்டிருப்பதைக் கண்டு மின்சார விளக்கைப் போடுகிறான். ஜயா தூக்கி வாரிப்போட்டது போல எழுந்திருந்து கண்களைத் துடைத்துக்கொள்ளுகிறாள். அவன் வெளியேயிருந்து வீட்டிற்குள் வந்ததை அவள் கவனிக்கவில்லை.

அவனுக்கு முப்பந்தைந்து வயதிருக்கும். எலும்பெடுத்துப்போன முகமும் சற்றே வழுக்கை விழுந்த கிராப்பும் உடையவன், மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தான். அவன் கலியாணம் செய்து கொள்ளாத வக்கீல்; சொத்துடையவன்.

ஜயாவின் கண்ணீரைக் கண்டு திடுக்கிடுகிறான்.

சுந்தரம்: (ஜயாவை நெருங்கி) ஜயா, என்ன ஒரு மாதிரி இருக்கிறாய்? என்ன சமாசாரம்; குழந்தைகள் எங்கே?

ஜயா: (மெல்ல) குழந்தைகள் விளையாடச் வென்றவர்கள் இன்னம் வரவில்லை.

சுந்தரம்: (அவளை நெருங்கித் தோளில் கை வைத்த வண்ணம்) ஏன் அழுகிறாய், சொல்லமாட்டாயா?

ஜயா: (நடுநடுங்கி விலகி) நான் கொஞ்சம் தனியாகஇருக்கலாமா? எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. பைத்தியம் பிடித்துவிடும் போல் இருக்கிறது.

சுந்தரம்: (வேடிக்கையாக) உன் அகமுடையானைப் போலவா!

ஜயா: (விக்கலுடன், வெறி பிடித்தவள் போல) அவரைக் கேலி செய்ய உங்களுக்கு என்ன அதிகாரம்?

சுந்தரம்: (சிரித்து) ஓகோ? அகமுடையானைச் சொன்னது உனக்குப் பொத்துக்கொண்டு வருகிறதே! எவ்வளவு நாளாக இந்தப் பிரியம் அவன் மேல்?

ஜயா: என்றுமே பிரியம் மாறினது கிடையாது.

சுந்தரம்: உன்னைத் தலையில் வைத்துக்கொண்டு தாங்கினானே அதற்காகவா?

ஜயா: தாங்காதது அவர் குற்றமல்ல.

சுந்தரம்: குடும்பத்தை-பச்சைக் குழந்தைகளையும் பத்தினியையும்-பரிதவிக்க நடுத்தெவில் நிறுத்திவிட்டுப் போனானே, கொஞ்சம் கூடப் பொறுப்பில்லாமல்-அது குற்றமில்லையாக்கும்?

ஜயா: அவர் அப்படித்தன் இஷ்டத்துடன் செய்யவில்லை.

சுந்தரம்: தன்னிஷ்டம்! குடும்பத்தைக் காப்பாற்றச் சக்தியற்ற பேடிக்குத் தன்னிஷ்டம் வேறா?

ஜயா: (திடீரென்று அவன் பக்கம் திரும்பிக் கோபத்துடன்) நீங்கள் என் குழந்தைகளைக் காப்பாற்றியதற்காகப் பதில் நான் அடையும்அவமானம் அதற்கு எல்லையில்லையா? அது என்னுடன் நிற்கலாகாதா?

சுந்தரம்: இன்றென்ன இப்படிப் பேசுகிறாய், ஜயம்? அகமுடையான் நினைவு வந்துவிட்டதோ?

ஜயா: என்றுமே அவர் நினைவு மறந்ததில்லை.

சுந்தரம்: ஓகோ! ஆனால் நான்.

ஜயா: (சட்டென்று) நீங்கள் என்ன?

சுந்தரம்: (குழப்பத்துடன் ஒரு நாற்காலியில். சாய்ந்த வண்ணம்) அதாவது என்மேல்...

ஜயா: உங்கள்மேல் என்ன?

சுந்தரம்: அன்பு குறைந்து விட்டதோ?

ஜயா: (மெய்மறந்து) என்றாவது இருந்தாலல்லவா குறைய!

சுந்தரம்: (கொஞ்சம் கோபத்துடன்) என்ன உளறுகிறாய்?

ஜயா: உளறவில்லை. சரியாகத்தான் சொல்லுகிறேன்.

சுந்தரம்: (அவளை உற்றுக்கவனித்துக்கொண்டு) பின், நீ சொன்னதெல்லாம் பொய்யா?

ஜயா: என்று,என்ன, சொன்னேன்?

சுந்தரம்: ஆனால் கேவலம் மிருக இச்சைதானா நீ என்னுடன் வாழ்ந்ததற்குக் காரணம்?

ஜயா: அதுவும் கிடையாது!

சுந்தரம்: நீ என்னுடன் இருக்க இணங்கினதின் காரணமென்ன, பின்?

ஜயா: நன்றி.

சுந்தரம்: (வெறுப்புடன்) எதற்காக?

ஜயா: என் குழந்தைகளை நீங்கள் காப்பாற்றுவதற்காக.

சுந்தரம்: நன்றியா! உன் மனதில் அதுமட்டும் தானா இருக்கிறது? வேறொன்றும் இல்லையா?

ஜயா: இல்லை!

சுந்தரம்: (திகைப்பும் ஆச்சரியமும் கொண்டு ) இல்லையா? நீ என்னை-என்னை காதலிக்கவில்லையா, ஜயம்?

ஜயா: (குழப்பத்துடன்) இல்லை! முடியாது! என்றுமே!

சுந்தரம்: முடியாதா?... நன்றியா செலுத்துகிறாய்? நன்றி!... அதற்காக உன் உடலைவிற்கத் துணிந்தாய்... நீ சொல்லுவது நிஜமானால்?

ஜயா: நான் சொல்லுவதை நீங்கள் இனிமேல் நம்புகிறீர்களா இல்லையா என்பதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் சொல்லுவது ஒவ்வொரு வார்த்தையும் உண்மை.

சுந்தரம்: உன் குழந்தைகளுக்காக நீ எதையும் செய்யத் துணிவாயோ?

ஜயா: (பலபலவென்று கண்ணீர்விட்டு) செய்து விட்டேனே! இனிமேலா? இல்லை!

(உடல் நடுக்கத் தள்ளாடிக்கொண்டு தரையில் உட்கார்ந்து சுவரில் சாய்ந்துக்கொண்டு விடுகிறாள்)

குழந்தைகள் ரவியும் சசியும்ன வெகு உற்சாகமாக உள்ளே ஓடிவருகிறார்கள். தாயார் கண்ணும் கண்ணீருமாக இருப்பதைக் கண்டு பிரமித்து நின்றுவிடுகிறார்கள்.

மூத்தவனுக்கு சுமார் எட்டு வயது. இளையவனுக்க ஆறு; மூத்தவன் ஜயாவின் முக ஜாடை கொண்டிருக்கிறான்)

ரவி: அம்மா, ஏம்மா அழறே?

சசி: மாமா அடிச்சாளாம்மா?

ஜயா: இலலேப்பா? வாசல்லே போய் வெளயாடுங்கோ, போங்கோ!

(குழந்தைகள் இஷ்டமின்றி வெளியே போகிறார்கள்)

சுந்தரம்: இதுவரையில் நீ சொன்னதெல்லாம் செய்ததெல்லாம்வெறும் தேவடியாள் பசப்புத்தானோ?

ஜயா: சொல்லுங்கள்! நான் அவ்வளவுக்கும் பாத்திரமானவள்தான்! என் வாய் அடைபட்டுப் போயிருக்கிறது நன்றியினாலே.

சுந்தரம்: (கோபாமாக) போடி, பாதகி! சீ, உன் நன்றியைக் கொண்டு போடு குப்பையில்! அது யாருக்கு வேண்டும்?.... அடடா! உயிருக்கு உயிராகக் காதலித்தேன் நான்-உன்னை-உனக்காக உன் குழந்தைகளை ரஷித்தேன். அதற்குப் பதிலா இது?

ஜயா: பதிலாகத்தான என் உடலை-என் மானத்தை-என் உயிரை-உங்களுக்குக் கொடுத்து விட்டேனே! வேறென்ன நான் செய்யக்கூடும்?

சுந்தரம்: அது மட்டும் வேண்டுமென்று நான் கேட்கவில்லையே. என் அன்பை, உன் ஹிருதயத்தை, உன் மனப்பூர்வமான காதலையல்லவா நான் எதிர்பார்த்தேன்.

ஜயா: என் ஹிருதயமோ, மனதோ என்னிட மெங்கிருக்கிறது- நான் அதை ஒருவருக்குக் கொடுப்பதற்கு?

சுந்தரம்: பின் யாரிடமிருக்கிறது?

ஜயா: சொல்ல வேண்டுமா?

சுந்தரம்: ஐயோ, என் வாழ்க்கையைப் பாழாக்கி விட்டாயே?

ஜயா: நான் என்ன செய்வேன்?

சுந்தரம்: சுந்தரம்! என்ன செய்வாயா?

ஜயா: எவ்விதமாகவாவது நான் உங்களுக்கு வாக்கு கொடுத்த துண்டா?

சுந்தரம்: அதற்கொங்கே தேவையிருந்தது? நானும ஒன்றும் உன்னிடம கேட்கவில்லை. நீ அவ்வளவு திருப்திகரமாக நடநது கொண்டாய்.

ஜயா: நன்றியறிதலால்!

சுந்தரம்: அன்பாலல்ல?

ஜயா: அதைத் திருப்பித் திருப்பிக் கேட்பதில் என்ன உபயோகமிருக்கிறது?

சுந்தரம்: அடடா! எவ்வளவோ தேடியலைந்து, கலியாணமே செய்து கொள்ளாமலிருந்து, கடைசியில் எனக்குத திருப்திகரமான வாழ்கைத துணையை உன்னிடம கண்டு விடடதாகக் களித்திருந்தேனே!

ஜயா: அப்படிப்பட்ட எண்ணத்தை உங்கள் மனதில் ஊட்டியிருந்தால் என்னை மன்னிக்க வேண்டும்.

சுந்தரம்: (திடீரென்று கோபம் கொண்டு) மன்னிக்கவா? உன்னை இந்த நிமிஷத்தில் கொலை செய்தாலும் தோஷமில்லையே!

ஜயா: (சாவதானமாக) தேவையே இல்லையே! கொலைசெய்ய என்னிடம் என்ன இருக்கிறது? என்று என்னை நீங்கள் தொட்டீர்களோ அன்றே உங்கள் கைக் கத்தியால் என்னைக் கொலை செய்துவிட்டீர்கள். இன்று மறுபடியும் யாரைக் கொல்ல?

சுந்தரம்: (ஆச்சரியத்துடன்) ஆனால் விருப்பமில்லாமலா, வேண்டா வெறுப்பாகவா, இத்தனை வருஷம் என்னுடன் வாழ்ந்தாய் மனைவி போல?

ஜயா: விருப்பு வெறுப்பே கிடையாது. நான் ஜடமாக இருந்தேன்.

சுந்தரம்: ஜயம், என்னிடம் வந்தபொழுது உன் மனது உடைந்திருந்ததை நான் அறியவில்லை. அது என் குற்றம்தான். தெரியாத்தனமாக இருந்துவிட்டேன். இனிமேல் என்னால் இயன்றவரை ஈடு செய்துவிடுகிறேன். உன் மனதறிந்து நடந்து கொள்கிறேன். என்னை மன்னி. ஜயம்!

ஜயா: வீண் சிரமம்! நான் மன்னிப்பதற்கு ஒன்றுமில்லை.

சுந்தரம்: காதலில்லாமல், நீ இப்படிச் சொன்னபிறகு, நாம் எப்படிச் சேர்ந்து வாழ்வது?

ஜயா: முடியாது தான். நான் எதிர்பார்க்கவில்லை.

சுந்தரம்: பின் என்ன செய்வாய்-குழந்தைகளுடன்?

ஜயா: குழந்தைகளைத் தகப்பனாரிடம் ஒப்புவித்து விடுவேன். என்னைப் பற்றி கவலையில்லை. நான் உயிரை...

சுந்தரம்: (ஆச்சரியத்துடன்) தகப்பனார் எங்கே இருக்கிறார்?

ஜயா: இன்று இந்தியாவிற்கு, சென்னைக்கு வந்துவிட்டார்.

சுந்தரம்: சென்னைக்கா? எங்கிருந்து?

ஜயா: அந்தமானிலிருந்து!

சுந்தரம்: அவர் கைதியா?

ஜயா: அரசியல் கைதி!

சுந்தரம்: ஓகோ! சமீபத்தில் விடுதலையடைந்தவர்களில் ஒருவரா? நேற்று பத்திரிகையில் வெளிவந்ததே தகவல்?

ஜயா: ஆமாம்!

சுந்தரம்: நீ உன் புருஷனிடம் போகப்போகிறாய்?

ஜயா: இல்லை! எப்படி முடியும்?

சுந்தரம்: ஏன்?

ஜயா: தெரியாமல் இருக்க முடியாது. நான் சொல்லுவேன்! அவரை ஏமாற்ற மாட்டேன்.

சுந்தரம்: நீ அவரை இவ்வளவு நினைவிற் கொண்டிருக்கிறாயே அவர் ஏன் உன்னைச் சந்தியில் நிறுத்திவிட்டுச் சென்றார்?

ஜயா: அன்பின் குழைவால் இல்லை!

சுந்தரம்: தேசத்திற்காகச் சென்றார் உண்மை. பெண்சாதி பிள்ளைகள் என்ன ஆவது என்று நினைத்தாரா?

ஜயா: தேசம் காப்பாற்றும் என்று எண்ணினார்; பூர்ணமாக நம்பினார். அப்படியே என்னிடம் சொன்னார். தேசம் தன் கடமையைச் செய்ய மறந்தது. நான் இவ்வாழ்க்கையில் இறங்க, குழந்தைகளுக்காக இறங்க-அவசிய மேற்பட்டது.

சுந்தரம்: வேறு வழியில்லையோ?

ஜயா: இல்லை, எல்லாம் பார்த்துவிட்டுத்தான் இந்தப் பாதகத்தில் விழத் தீர்மானித்தேன். என் வீழ்ச்சிக்கு, (பொறுமிக் கொண்டு) என் கெட்ட நடத்தைக்கு, இந்தச் சமூகம் தான் காரணம், நீங்களும்,என் உறவினர்களும், இதர மக்களும் என் தலைகீழ் வீழ்ச்சியைத் தடுக்க யார் என்ன பிரயத்தனம் செய்தீர்கள்? எனக்குப் பிழைக்கத்தான் ஏதாவது வழி தெரிந்ததா? இருக்கிறதா? கிடையாது. என் பாழாய்போன படிப்பும் எனக்குப் பயன்படவில்லை. ஒரு வீட்டில் சமையலுக்கு அமர்ந்திருந்தது பார்த்தேன். என் குழந்தைகளை அவர்கள் படுத்திய பாடு என்னால் பார்த்துச் சகிக்க முடியவில்லை. ஒரு மாதத்திற்கு மேல் அங்கிருக்க முடியவில்லை. கிளப்பில் அறைத்துப் பார்த்தேன். அங்க நாலு நாள் கூட இருக்க முடியவில்லை. பிச்சையெடுத்துப் பார்த்தேன். பட்டணத்தில் போடுவாரில்லை. வேலை செய்து பிழைப்பதற் கென்ன கேடு? என்றார்கள். பந்துக்கள் பார்க்காதது போலச் சென்றார்கள்.... நான் உங்கள் வீட்டில் நுழைந்தபோது குழந்தைகள் ஒரு நாள் பட்னி, நான் நாலு நாள் பட்டினி.

சுந்தரம்: என்ன கஷ்டம்!

ஜயா: நீங்கள் குழந்தைகளுக்கு உயிர்ப்பிச்சையளித்தீர்கள்.

சுந்தரம்: உன் மௌனமும் பணிவும் இப்பொழுதல்லவா எனக்கு அர்த்தமாகிறது! வெட்கத்தால்தான் நீ உன் முன் வாழ்க்கையைப் பற்றிஎன்னிடம் சொல்லவில்லை என்று எண்ணியிருந்தேன். அதனாலே தான் நானும் அதைப் பற்றி உன்னிடம் அதிகமாகக் கேட்கவில்லை... அன்று இருட்டுகிற வேளையில் உன் குழந்தைகளுடன் இந்த ரேழியில் வந்து நின்றாய்.

ஜயா: இருட்டினால் தங்க இடமேது? போக்கிரிகள் இம்சை வேறு.

சுந்தரம்: யாகம் கேட்டாய், இங்கேயே இரு என்றேன்.

ஜயா: என் குழந்தைகளைக் காத்துப் புண்ணியம் கட்டிக்கொண்டீர்கள்.

சுந்தரம்: ஜயா, இப்பொழுது நான் என்ன செய்வது? என் மனக்கோட்டை இடிந்து விட்டதே!... ஆமாம்! நீ இனிமேல் இங்கே இருக்க முடியாதுதான். இந்த வாழ்க்கை இனிமேல் சாத்தியமில்லைதான்! ஆனால், எனக்கு இனிமேல் வேறு வாழ்க்கையும் சாத்தியமில்லை. தனியாக நான் பாட்டுக்குக் கிளப்பில் சாப்பிட்டுக்கொண்டு திக்கற்றுக் கிடப்பேன். எனக்குக் குடும்பத்தில் பற்றும் பாசமும் ஏற்படுத்திவிட்டு இப்படி என்னைக் கைவிட்டுச் செல்கிறாயே? சொத்தை ஒரு சுமையாகக் கொண்டு ஏகாங்கியாக இருந்த உலகில் திரிந்த எனக்கு, பணமும் நல்ல வழியில் செலவாகும் என்று காட்டினாய்!.... ஆனால் என்னைப் பற்றிய இவ்வளவு விவரங்களையும் நீ ஏன் முன்பே என்னிடம் சொல்லவில்லை?

ஜயா: அவசியத்திற்கு மேல் உங்களைத் தொந்தரவு செய்யக்கூடாது என்று இருந்தேன்

(குழந்தைகள் மறுபடியும் உள்ளே ஓடி வருகிறார்கள்)

ரவி: அம்மா! அம்மா வாசல்லே யாரோ ஒரு மாமா வந்திருக்காம்மா! என்னை உத்துப் பார்த்தார். அப்புறம் வந்து உங்கம்மா பேரென்னான்னு கேட்டார். சொன்னேம்மா! உன்னை கூப்படறாரம்மா! பார்க்கணுமாம், அது யாரம்மா?

ஜயா: (குழப்பத்தால் கலங்கித் தன் வசமற்றவளாய்) அவர்தான்! நிச்சயம் அவர்தான்! இந்த உலகத்தில் வேறு யார் என்னைக் கூப்பிட இருக்கிறார்கள்.... (சுந்தரத்தைப் பார்த்து) என்னை மன்னியுங்கள். என் கணவர் கூப்பிடுகிறார். போகலாமா?

சுந்தரம்: இதுவரையில் நான் ஏதோ வெறியன் போல நடந்துகொண்டேன். எனக்கு இப்பொழுது தெளிவு வந்துவிட்டது. ஜயா, நீ மன்னிக்க வேண்டும். உன் கணவரிடம் போ! நன்றாக இரு! உன் குழந்தைகள் என் சொத்துக்கு வாரிசுகள்.

ஜயா: என் குழந்தைகள் அவர்களுடைய தகப்பானாருடைய வாரிசுகள். அவரிடம் அவர்களைச் சேர்த்துவிட்டால் என் பொறுப்புத் தீர்ந்துவிடும். நான் நிம்மதியாக உயிர் விடலாம்!

சுந்தரம்: (திடுக்கிட்டு) உயிர் விடவா?

ஜயா: ஆமாம்! நான் இனிமேல் எதற்காக ஜீவிப்பது?

சுந்தரம்: உன்னைக் குற்றமற்றவள் என்று அறிய அவருக்குத் தைரியம் வரட்டும்!

ஜயா: என்னைப் பற்றிக் கவலைக் கிடையாது (குழந்தைகளுடன் வெளியே போகிறாள்)

சுந்தரம்: அன்பு, பிரேமை! (எங்கிருந்தோ கிராமபோன் பாட்டு கேட்கிறது சுனோ சுனோ)

ஹாய்! பிரேம் கியா ஹை?

**உஷையின் கனவு**

கிழக்கில், உதய பர்வதத்தின் மேலண்டைச் சாரல்; நக்ஷத்திரங்கள் என்னும் லஸ்தர்கள் தொங்கித் தூங்கும் இருள் மாளிகை; காலக்குமரி உஷை தூங்குகிறாள். பொழுதுபுலருவதற்கு முந்திய இருட்டு, நிசை (ராத்திரி) உஷையைத் தட்டி எழுப்புகிறாள்.

நிசை: உஷே! எழுந்திரு, நேரமாகிவிட்டது; நக்ஷத்திரங்கள் கூட அவிந்து போகிற சமயம்.

உஷை: (எழுந்து உட்கார்ந்து) என்னை ஏணடி எழுப்பினாய்?

நிசை: இப்பொழுது என் பக்கத்தில் படுத்திருந்த நிழல்–இல்லை? உருவம்தான்! எங்கே?

நிசை: என்ன, தூக்கக் கலக்கமா?

உஷை: தூங்கினது வாஸ்வந்தான், ஆனால் கண்டது கனவல்ல.

நிசை: அதெப்படிச் சொல்லுகிறாய்?

உஷை: அந்த உடலின் உணர்ச்சி இன்னும் என் தேகத்தில் இருக்கிறது

நிசை: யார் அது?

உஷை: யாரடி, அது? சொல்லேன்? எங்கே மறைந்தான்? அவன்?

நிசை: உஷே! உனக்கென்ன சித்தப் பிரமையா?

உஷை: ஒருவேளை, இரவின் இருள் உருவமோ? இல்லையே! ஜயோதிர் தேவதை போலல்லவா இருந்தான்!

நிசை: பின்னே அவன் யாராகத்தான் இருப்பான்?

உஷை: என் பாவத்தைக் கொட்டிக்கொள்ள வந்த தேவதையே? ஒருவேளை, நித்திரையே, உன் சேஷ்டைதானா இது? நினைவின் எத்தகைய திரைகளின் பின்னாலிருந்து இவ்வுருவம் வானவடிவெடுத்து வந்தது என் மனமேடையில் இப்படித் தோன்றி மறைய?.... இல்லை. நிஜமான ரூபம்தான். ஏனென்கிறாயா? திதிக்கிறது. மணக்கிறத, தித்திக்கிறது என்று அவன் கொஞ்சிக் கொஞ்சி என் வாயின் மேல் மோனமுத்திரை போட்ட ஒவ்வொரு தரமும் இடையிடையே என் காதில் காதல் மொழிகளைக் கொட்டினான். அவைகளின் ஒலியலை இன்னும் என்னுள் பரவிச் சென்று கொண்டிருக்கிறது. அது என் மனதின் ஏமாற்றமாயிருக்குமா என்ன?

நிசை: இருக்கமுடியாதுதான். (கோபத்துடன்) யாரோ இங்கு வந்திருக்க வேண்டும்.

உஷை: பிசகு! இவ்வேளையில் என் கன்னிமாடத்தில் நுழைய எவனுக்கு முடியும்? முடியாது. உபயோகமற்ற ஸ்வப்பனம்தானடி இது.

நிசை: அப்படித்தானிருக்க வேண்டும்!

உஷை: போடி, என்னைக் கனிவுறச் செய்த அவனுடைய காதலுறுதிகள் இன்னும் என் நாடிகளில் ஜீவரசம்போல ஓடித்துடிக்கின்றனவே! வாஸ்தவமில்லாதுபோனால் என் மனமா அவ்வளவு கற்பிக்கும்?

நிசை: கற்பிக்கும்!

உஷை: அவ்வழியில் நான் என் மனதைச் செலுத்தவில்லையே! மேலும் கற்பனையானது கனவில் சிதைவுற்றல்லவா தோன்றும் என்பார்கள்? இது கற்பனை அல்ல! அடி, திசை மன்னரையும் திரஸ்கரித்த என் புருதச் செருக்கைச் சீரழித்துவிட்டானே, பாவி! ஒரே அடியில் என் மனசையும் மானத்தையும் அழித்துவிட்டானே! என் உடலுங்கூட உருகிவிடும் போலிருக்கிறதே!

நிசை: அவன் எப்படி இருந்தான்?

உஷை: எப்படி அடி வர்ணிப்பேன் அவ்வுருவை? என்னால் முடியாது! இணைசொல்ல முடிந்தால்தானே!

நிசை: நான் ஒரு படம் காட்டுகிறேன், பார்த்துச் சொல்.

(இரவு மறைந்து அருணோதயம்)

உஷை: என்னடி ஒன்றும் காணவில்லையே?..... எங்கே?..... இதோ கிழக்கே தெரியும்!..... ஆ, இவன்தானடி என மன்மதன், அநிருத்தன்! தடையற்றவன்! அதனால்தான் என்னுள் ஊடுருவிப் பாய்ந்துவிட்டான்.

ஸூர்யா நான் அயர்ந்து தூங்கும்பொழுது என்னுள்ளத்தைக் கொள்ளை கொண்ட கள்வா! என் முன் தோன்று! என் காதற் சிலையே என் கண்முன் வா! கனவுருவுடன் என்னைக் கைதி செய்த கணவா! நான் உன் அடிமை! உன் ஒளி உடலை பார்க்க என் கண்கள் கூசுகின்றன. உன் கிரணங்களால் என்னை அணைத்து உன்னுள் மறைத்துக்கொள்! ஆ, அப்படித்தான்!

(உஷத்காலம் வெளியேறி ஸூர்யோதமாகிறது)